# பெருமானாரின் துணைவியர்

## (உம்மஹாத்துல் முஃமினீன்)

# பெருமானாரின் துணைவியர்

(ரலியல்லாஹு தஆலா அன்ஹுன்ன)

# வரலாறு

மொழி பெயர்ப்பு:

திருக்குர்ஆன், புகாரி, முஸ்லிம் விரிவுரையாசிரியர்

[redacted] எஸ்.எஸ். முஹம்மது அப்துல் காதிர் சாஹிப் பாக்கவி [redacted] உத்தமபாளையம்

வெளியீடு

பிஸ்மி பப்ளிஷர்ஸ்

822-4, அண்ணா சாலை,
மக்கா மஸ்ஜித் வளாகம்
சென்னை - 600 002.
போன்: 52142766, 52104855






பொருளடக்கம்

# நூல் விபரம்


தலைப்பு : பெருமானாரின் துணைவியர்
(உம்மஹாத்துல் முஃமினீன்)

ஆசிரியர் : [redacted] எஸ்.எஸ். முஹம்மது அப்துல் காதிர் சாஹிப் பாக்கவி [redacted])

உரிமை : மௌலவி, அல்ஹாஜ் எஸ்.எஸ்.எம். முஹம்மது ஜாபர் ஜமாலி
(மொழிபெயர்ப்பாசிரியரின்புதல்வர்)

முதல் பதிப்பு : மே 2005

பக்கங்கள் : 160

பிரதிகள் : 1200

விலை : ரூ. 30.00

ஒளியச்சுக்கோர்வை : ஸ்டார் த்ரீ
சென்னை-7.
09840323439

வெளியீடு : பிஸ்மி புக் ஹவுஸ்
822-4, அண்ணா சாலை
மக்கா மஸ்ஜித் காம்ப்ளக்ஸ்
சென்னை - 600 002.
போன்: 52142766, 52104855





பொருளடக்கம்

# பதிப்புரை

பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்

அல்ஹம்துலில்லாஹ்!

முஸ்லிம்களின் உயிரைவிட மேலாக கருதும் பெருமானார்(ஸல்) அவர்களைப் பற்றியும் - உம்மஹாத்துல் முஃமினீன் எனப்படும் முஸ்லிம்களின் அன்னையர்களில் ஒருவரான ஆயிஷா சித்தீக்கா (ரலி) அவர்களைப் பற்றியும் இழிவாக பேசிய ஐரோப்பிய மதவெறி பிரச்சாரகன் ரூனார் சோகார்ட்டருக்கு உலகெங்கும் கடும் எதிர்ப்பு புயல் எழுந்துள்ளது. 58 வயதில் அண்ணல் பெருமானார் (ஸல்) அவர்கள் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களை மணம் முடித்தது பற்றிய அவரது ஏளனப் பேச்சு - உலக முஸ்லிம்களை கொதிப்படைய வைத்துள்ளது. சுவீடன் நாட்டின் இமாம்கள் அமைப்பின் தலைமை இமாம் ஹஸன் மூஸா கண்டனம் தெரிவித்துள்ளார்.

சில வருடங்களுக்கு முன் சாலமன் ருஷ்டி எழுதிய எழுத்துக்கள் பெரும் சர்ச்சையை கிளப்பி ஈரான் சமயத் தலைவர் ஆயத்துல்லாஹ் ஹுமைனி ருஷ்டிக்கு மரண தண்டனை விதித்து தீர்ப்பளித்தது இன்றும் நம் நினைவில் நிற்கிறது.

இப்படிப்பட்ட எண்ணற்ற சர்ச்சைகளுக்கு பதிலடியாக பல திருமணங்களை நபிகளார் செய்தது ஏன்?

அதனால் இஸ்லாமிய உலகுக்கு கிடைத்த பலன்கள் என்ன?

இதுவரை தமிழில் வெளிவராத மேலும் பல விஷயங்கள் இந்நூலில் அடங்கியுள்ளது. இவற்றை தெளிவான முறையில் தெள்ளு தமிழ் நடையில் எடுத்துரைக்கிறார்கள் பன்னூலாசிரியர் மௌலவி எஸ்.எஸ். முஹம்மது அப்துல் காதிர் சாஹிப் பாக்கவி[redacted] அவர்கள்.

[redacted] அவர்களின் நூல் வரிசையில், பெருமானார்(ஸல்) அவர்களின் துணைவியர் என்ற நூலை பிஸ்மி பப்ளிஷர்ஸ் வெளியிடுவதற்கு அல்லாஹ் கிருபை செய்தான். அல்ஹம்துலில்லாஹ்.

பிஸ்மி புக் ஹவுஸ்

இனிக்கின்ற வாழ்வுக்கு இறைமறையும் - நபி வழியுமே



பொருளடக்கம்

# பொருளடக்கம்

# உம்மஹாத்துல் முஃமினீன்

بسم الله الرحمن الرحيم.

الحمد لله الذي نحمده ونستعينه ونستغفره ونؤمن به ونتوكل عليه

ونعوذ بالله من شرور انفسنا ومن سيئآت اعمالنا من يهده الله فلا

مضل له ومن يضلله فلا هادي له ونشهد أن لا إله إلا الله وحده لا

شريك له ونشهد أن محمدا عبده ورسوله

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதிலும் மொத்தம் பதினோரு மனைவியருக்கு கணவராக இருந்திருக்கிறார்கள். ஏக காலத்தில் ஒன்பது பெண்களுக்குக் கணவராக இருந்தார்கள். அவர்கள் இவ்வுலகை விட்டகலும் போதும் ஒன்பது பெண்கள் இருந்தனர்.

அவர்கள் விபரம் வருமாறு:

1. அன்னை கதீஜத்துல் குப்ரா பின்து குவைலித் (ரலி)
2. அன்னை ஸௌதாபின்து ஜம்ஆ (ரலி)
3. அன்னை ஆயிஷா பின்து அபீபக்கரினிஸ் ஸித்தீக் (ரலி)
4. அன்னை ஹப்ஸா பின்து உமர் பாரூக் (ரலி)
5. அன்னை ஜைனபு பின்து குஜைமா (ரலி)
6. அன்னை ஜைனபு பின்து ஜஹ்ஷ் (ரலி)



பொருளடக்கம்

7. அன்னை உம்மு ஹபீபா பின்து அபீ ஸுஃப்யான் (ரலி)

8. அன்னை உம்மு ஸலமா பின்து அபீ உமய்யா (ரலி)

9. அன்னை மைமூனா பின்துல் ஹாரித் (ரலி)

10. அன்னை ஸபிய்யா பின்துல் ஹுய்யி (ரலி)

11. அன்னை ஜுவைரிய்யா பின்துல் ஹாரித் (ரலி)

## அடிமைப் பெண்கள்

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது புதல்வர் ஸெய்யிதுனா இப்ராஹீமின் தாயாரான மாரியத்துல் கிப்தியய்யா (ரலி)

2. அன்னை ஜைனபு பின்து ஜஹ்ஷ் (ரலி) அன்பளிப்புக் கொடுத்த அடிமைப் பெண் (ரலி)

3. ரைஹானா பின்து யஜீத் (ரலி)

4. பனூ குறைளா வகுப்பைச் சேர்ந்த ஸுலைக்கா (ரலி)

يٰاَيُّهَا النَّبِيُّ اِنَّا اَحْلَلْنَا لَكَ اَزْوَاجَكَ الّٰتِيْٓ اٰتَيْتَ اُجُوْرَهُنَّ وَمَا
مَلَكَتْ يَمِيْنُكَ مِمَّآ اَفَآءَ اللّٰهُ عَلَيْكَ وَبَنٰتِ عَمِّكَ وَبَنٰتِ
عَمّٰتِكَ وَبَنٰتِ خَالِكَ وَبَنٰتِ خٰلٰتِكَ الّٰتِيْ هَاجَرْنَ مَعَكَ وَامْرَاَةً
مُّؤْمِنَةً اِنْ وَّهَبَتْ نَفْسَهَا لِلنَّبِيِّ اِنْ اَرَادَ النَّبِيُّ اَنْ يَّسْتَنْكِحَهَا
خَالِصَةً لَّكَ مِنْ دُوْنِ الْمُؤْمِنِيْنَ قَدْ عَلِمْنَا مَا فَرَضْنَا عَلَيْهِمْ فِيْٓ
اَزْوَاجِهِمْ وَمَا مَلَكَتْ اَيْمَانُهُمْ لِكَيْلَا يَكُوْنَ عَلَيْكَ حَرَجٌ
وَكَانَ اللّٰهُ غَفُوْرًا رَّحِيْمًا



பொருளடக்கம்

நபியே! நிச்சயமாக நாம் உமக்கு உமது மனைவியரை - அவர்களது கூலிகளை (மஹ்றை) நீர் கொடுத்து விட்டீரே அவர்களையும், உமக்கு அல்லாஹ் (சிரமமில்லாமல்) கொடுத்ததிலிருந்து உமது வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும், உம்முடன் ஹிஜ்ரத்துச் செய்தவர்களாகிய உமது தந்தையுடன் பிறந்தவரது புதல்விகளையும், உமது மாமிகளின் புதல்விகளையும், உமது மாமனின் புதல்விகளையும், உமது தாயின் சகோதரிகளின் புதல்விகளையும், தன்னை நபிக்கு நன்கொடை அளித்த மூமினான பெண்ணை... திருமணம் செய்து கொள்ள நபி விரும்புவாராயின் ஏனைய மூமின்களுக்கு அல்லாமல் உமக்கு மட்டும் உமது மனைவியராக நாம் அனுமதித்தோம். உம்மீது கஷ்டம் ஏற்படாதிருக்கும் பொருட்டு. அவர்களின் மனைவியரையும் அவர்களின் வலக்கரங்கள் சொந்தப்படுத்திக் கொண்டதையும் பற்றி அவர்கள் மீது நாம் கடமையாக்கி இருப்பதையும் நாம் அறிந்திருக்கிறோம். மேலும், அல்லாஹ் (மிக) மன்னிப்பவனாக (மிக) கிருபை செய்பவனாக இருக்கிறான். (அல்குர்ஆன் 33:50)

فَانْكِحُوْا مَاطَابَ لَكُمْ مِّنَ النِّسَآءِ مَثْنٰى وَثُلٰثَ وَرُبٰعَ فَاِنْ خِفْتُمْ اَلَّاتَعْدِلُوْا فَوَاحِدَةً اَوْمَا مَلَكَتْ اَيْمَانُكُمْ ذٰلِكَ اَدْنٰٓى اَلَّا تَعُوْلُوْا

பெண்களிலிருந்து உங்களுக்கு மணமான (பிடித்தமான) வரை இரண்டிரண்டாக மும் மூன்றாக, நன்னான்காக திருமணம் செய்து கொள்ளுங்கள். ஆனால், (உங்கள் மனைவிய ருக்குள் நீங்கள் நீதி செய்ய மாட்டீர்கள் என்று பயந்தீர்களானால் ஒருவளை அல்லது உங்களது வலக்கரங்கள் சுதந்தரித்துக் கொண்டதை (போதுமாக்கிக் கொள்ளுங்கள்.) இது நீங்கள் அநியாயம் செய்யாதிருப்பதற்கு மிகவும் நெருங்கியதாக இருக்கிறது என்று கூறியுள்ளான்.

(அல்குர்ஆன் 4:3)

இந்த வசனத்தின் மூலம் முஸ்லிம்கள் நான்கு பெண்கள் வரையில் தான் ஏக காலத்தில் மனைவியராகக் கொள்ளலாம் என்று கட்டளை யிட்டுள்ளான். அதற்கு மேல் அதிகமானவர்களை மனைவியராகக் கொள்ள சட்டமில்லை. ஒருவள் மரணமடைந்தால் அல்லது விவாகரத்துச் செய்யப் பட்ட பின்னர் அவளுக்கு பதிலாக வேறு ஒருவளை திருமணம் செய்வதை இந்த வசனங்கள் தடை செய்ய வில்லை. எனவே, முஸ்லிம்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் திருமணம் செய்து கொண்டே இருக்கலாம். ஆனால், நான்குக்கு அதிகமானவர் களை ஏக காலத்தில் மனைவியராகக் கொண்டு வாழலாகாது. அதிலும், முஸ்லிம்கள் தங்களுக்குப் பிடித்தமான பெண்களை திருமணம் செய்யலாம். அதற்கு அவர்கள் கட்டுப்படுத்தப்படவில்லை. ஆனால், திருக்குர்ஆனிலுள்ள வேறு ஒரு வசனத்தின் மூலம்

009-81

وَلَا تَنكِحُوا الْمُشْرِكَٰتِ حَتَّىٰ يُؤْمِنَّ وَلَأَمَةٌ مُّؤْمِنَةٌ خَيْرٌ مِّن مُّشْرِكَةٍ وَلَوْ أَعْجَبَتْكُمْ وَلَا تُنكِحُوا الْمُشْرِكِينَ حَتَّىٰ يُؤْمِنُوا وَلَعَبْدٌ مُّؤْمِنٌ خَيْرٌ مِّن مُّشْرِكٍ وَلَوْ أَعْجَبَكُمْ

அல்லாஹ்விற்கு இணைவைக்கும் பெண்களை முஸ்லிம்கள் திருமணம் செய்யலாகாது. அவர்கள் ஈமான் கொள்ளும்வரை - இணை வைக்கும் ஒரு பெண் உங்களை கவரக் கூடியவளாக இருந்தபோதிலும் சரியே அல்குர்ஆன் (2:221) என்று தடுக்கப்பட்டிருக்கிறது. எனவே, இணைவைப் பவராக இல்லாத (இணை வைத்து வணங்காத) எந்தப் பெண்ணையும் முஸ்லிம்கள் விரும்பினால் திருமணம் செய்யத் திருமறை தடை செய்ய வில்லை.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இவ்விதமாக பொது அனுமதியை இறைவன் வழங்கவில்லை. குறிப்பிட்ட நிபந் தனைக்குட்பட்டுத்தான் அவர்கள் திருமணம் செய்ய வேண்டும். நான்கு பேர்களுக்கு மேல் அதிகமான மனைவியரை ஏக காலத்தில் வைத்திருக்கக் கூடாது என்ற தடை உத்தரவை மட்டும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தளர்த்தினான். இத்தனை மனைவியரைத் தான் ஏக காலத்தில் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடு அவர்களுக்கு இல்லை. என்றாலும், இனிமேல் வேறு எந்தப் பெண்ணையும் திருமணம் செய்யக்கூடாது என்று தடைவிதித்து, திருமணம் செய்யவே கூடாது





பொருளடக்கம்

என்று கட்டுப்படுத்திவிட்டான். இதனைக் குறித்து இறைவன் தனது திருமறையில் 33:50-52 ஆகியவற்றில் கூறியுள்ளான். அதிலுள்ள நிபந்தனைகளின் படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் சிறிய, பெரிய தந்தையர்கள் மாமிமார்கள், தாய்வழியைச் சேர்ந்த சின்னம்மா, பெரியம்மா, மாமன் ஆகியவர்களின் புதல்விகள், ஹிஜ்ரத்துச் செய்த மூமினான பெண்கள், தன்னை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நன்கொடையாக அளித்த மூமினான பெண்கள் ஆகியவர்களைத் தான் திருமணம் செய்யலாம். முஸ்லிம் அல்லாத பெண்கள் முஷ்ரிக்காக இருந்தால், திருமணம் செய்யலாகாது. முஸ்லிம் அல்லாத எந்தப் பெண்ணையும் திருமணம் செய்யலாகாது. அதாவது இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவாத எந்தப் பெண்ணையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்யக் கூடாது.

நான்கு பேர்களுக்கு மேல், ஏககாலத்தில் மனைவியராகக் கொள்ளலாகாது என்ற பொதுவிதி வந்த பின்னர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் மனைவியரில் நான்கு பேர்களுடன் மட்டும் தான் உடலுறவு வைத்துக் கொண்டார்கள். மற்றவர்களுடன் உடலுறவு கொள்ளவில்லை.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1715 காண்க.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலத்திற்கு முன்னர், ஒரு ஆடவர் பல





பொருளடக்கம்

மனைவியரை திருமணம் செய்யும் வழக்கமும், அடிமைப் பெண்களை மனைவியராக வைத்துக் கொள்ளும் வழக்கமும் நெடுங்காலமாக இருந்து வந்தது. ஒரு ஆடவருக்கு எத்தனை மனைவி இருக்க வேண்டும் என்ற வரையறையோ, ஒரு ஆடவருக்கு ஒரு மனைவி என்ற கட்டுப்பாடோ, இஸ்லாத்திற்கு முன்னுள்ள எந்த மதத்திலும் நாட்டுப்பழக்கத்திலும் இல்லை. இஸ்லாம் மார்க்கம் தான் இதற்கு முதன் முதலாகக் கட்டுப்பாட்டை ஏற்படுத்திற்று.

فَانْكِحُوْا مَا طَابَ لَكُمْ مِّنَ النِّسَآءِ مَثْنٰى وَثُلٰثَ وَرُبٰعَ فَاِنْ خِفْتُمْ اَلَّا تَعْدِلُوْا فَوَاحِدَةً اَوْ مَا مَلَكَتْ اَيْمَانُكُمْ ذٰلِكَ اَدْنٰٓى اَلَّا تَعُوْلُوْا

பெண்களிலிருந்து உங்களுக்கு மணமான (பிடித்தமான) வரை இரண்டிரண்டாக மும் மூன்றாக, நன்னான்காக திருமணம் செய்து கொள்ளுங்கள். ஆனால், (உங்கள் மனைவிய ருக்குள்) நீங்கள் நீதி செய்ய மாட்டீர்கள் என்று பயந்தீர்களானால் ஒருவளை அல்லது உங்களது வலக்கரங்கள் சுதந்தரித்துக் கொண்டதை (போதுமாக்கிக் கொள்ளுங்கள்) இது நீங்கள் அநியாயம் செய்யாதிருப்பதற்கு மிகவும் நெருங்கியதாக இருக்கிறது என்று கூறியுள்ளான். அல்குர்ஆன் (4:3)

ஒருவர் ஏககாலத்தில் நான்கு மனைவியருக்கு மட்டும் தான் கணவராக இருக்கலாம். அதற்குமேல் அதிகமாக வைத்துக் கொள்வது கூடாது. மனைவி





பொருளடக்கம்

இறந்துவிட்டால் அல்லது விவாகரத்துச் செய்யப் பட்டால், அவளுக்குப் பதிலாக வேறு பெண்ணை திருமணம் செய்து கொள்ளலாம். அல்லாஹ்விற்கு இணை வைத்து வணங்குகிற பெண்ணைத் தவிர்த்து முஸ்லிம் பெண், வேதக்காரப் பெண் ஆகியவர்களில் எவரையும் திருமணம் செய்யலாம்.

وَلاَ تَنكِحُواْ مَا نَكَحَ ءَابَآؤُكُم مِّنَ النِّسَآءِ إِلاَّ مَا قَدْ سَلَفَ إِنَّهُ كَانَ فَاحِشَةً وَمَقْتًا وَسَآءَ سَبِيلاً حُرِّمَتْ عَلَيْكُمْ أُمَّهَٰتُكُمْ وَبَنَاتُكُمْ وَأَخَوَٰتُكُمْ وَعَمَّٰتُكُمْ وَخَٰلَٰتُكُمْ وَبَنَاتُ الأَخِ وَبَنَاتُ الأُخْتِ وَأُمَّهَٰتُكُمُ اللاَّتِي أَرْضَعْنَكُمْ وَأَخَوَٰتُكُم مِّنَ الرَّضَاعَةِ وَأُمَّهَٰتُ نِسَآئِكُمْ وَرَبَآئِبُكُمُ اللاَّتِي فِي حُجُورِكُم مِّن نِّسَآئِكُمُ اللاَّتِي دَخَلْتُم بِهِنَّ فَإِن لَّمْ تَكُونُواْ دَخَلْتُم بِهِنَّ فَلاَ جُنَاحَ عَلَيْكُمْ وَحَلاَئِلُ أَبْنَآئِكُمُ الَّذِينَ مِنْ أَصْلاَبِكُمْ وَأَن تَجْمَعُواْ بَيْنَ الأُخْتَيْنِ إِلاَّ مَا قَدْ سَلَفَ إِنَّ اللَّهَ كَانَ غَفُورًا رَّحِيمًا وَالْمُحْصَنَٰتُ مِنَ النِّسَآءِ إِلاَّ مَا مَلَكَتْ أَيْمَانُكُمْ كِتَٰبَ اللَّهِ عَلَيْكُمْ وَأُحِلَّ لَكُم مَّا وَرَآءَ ذَٰلِكُمْ أَن تَبْتَغُواْ بِأَمْوَٰلِكُم مُّحْصِنِينَ غَيْرَ مُسَٰفِحِينَ فَمَا اسْتَمْتَعْتُم بِهِ مِنْهُنَّ فَآتُوهُنَّ أُجُورَهُنَّ فَرِيضَةً وَلاَ جُنَاحَ عَلَيْكُمْ فِيمَا تَرَٰضَيْتُم بِهِ مِن بَعْدِ الْفَرِيضَةِ إِنَّ اللَّهَ كَانَ عَلِيمًا حَكِيمًا

தாய்மார்கள், புதல்விகள், சகோதரிகள், தந்தையின் சகோதரிகளான மாமிமார்கள்,





பொருளடக்கம்

தாயின் சகோதரிகள், சகோதரர்களின் புதல்விகள், சகோதரிகளின் புதல்விகள், பாலூட்டிய தாய்மார்கள், பால்குடிச் சகோதரிகள், மனைவிமார்களின் தாயாகிய மாமியார்கள். உடலுறவு கொள்ளப்பட்ட மனைவியரின் மகள்கள். மகன்களின் மனைவியர், மனைவியின் சகோதரிகள் (அதாவது மனைவி தன்னுடன் வாழ்ந்து கொண்டிருக்கையில் அவளுடைய சகோதரிகள்) ஆகியோரை திருமணம் செய்யலாகாது. தந்தையர்கள் மணம் புரிந்த பெண்கள் அதாவது மாற்றான் தாய்மார்கள், பிறரின் மனைவியர் ஆகியவர்களை திருமணம் செய்யலாகாது. (4:22-24) என்பது திருக்குர்ஆன் விதித்த இஸ்லாமியச் சட்டம்.

இச்சட்டங்கள் திருமறையில் பிரகடனம் செய்யப்பட்டபோது, பல முஸ்லிம்களுக்கு அக்கால வழக்கப்படி அல்லாஹ்விற்கு இணைவைக்கும் மனைவியரும், நான்குக்கும் மேற்பட்ட மனைவியரும் இருந்தனர். சட்டப்படி முஷ்ரிக்குகளான மனைவியர் விலக்கப்பட்டனர். நான்குக்கும் அதிகமாக இருந்தவர்களில் நான்கைத் தவிர அதிகமாக இருந்தவர்கள் அகற்றப்பட்டனர்.

குறிப்பு : மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ எண் 1155 காண்க.

அக்காலத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் நான்குக்கும் மேற்பட்ட மனைவியர் இருந்தனர். இறைவனிடமிருந்து நபித்துவம் கிடைத்த பின்னர் அதாவது முதல் மனைவிக்குப் பின்னர் நடந்த சகல திருமணங்





பொருளடக்கம்

களும் இறைவனின் வஹீ என்னும் அறிவிப்பின் படியே நிகழ்ந்தன. எந்தத் திருமணமும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சொந்த விருப்பத்திற்குச் செய்யப்பட்டதல்ல.

சில வருடங்களுக்கு முன்னர் பிரிட்டிஷ் மன்னராக இருந்த எட்டாவது எட்வர்டு தமது விருப்பப்படி தம்மனதிற்கு இயைந்த மனைவியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள இயலவில்லை. மனதிற்கியைந்த பெண்ணை மணந்து கொள்ள பிரிட்டிஷ் சட்டம் இடங் கொடுத்தாலும், மன்னரின் மனைவியாக அரசி என மக்கள் அங்கீரிக்க வேண்டியதிருப்பதால் பிரிட்டிஷ் அரசின் சம்மதமும் தேவை. எட்டாவது எட்வர்ட் விரும்பிய பெண்ணை மணக்க பிரிட்டிஷ் அரசு இணங்கவில்லை. எனவே, அவர் முடி துறந்துவிட்டு, தான் விரும்பிய பெண்ணை மணந்தார்.

அதன்பின்னர் சமீப காலத்தில் பதவிக்கு வந்த இரண்டாவது எலிஸபெத் பட்டத்து இளவரசியாக இருந்த காலத்தில், அரசு அனுமதியின்படி, தனக்கு உகந்த மணாளரை திருமணம் செய்ய வேண்டும். ஏனெனில், ராணியின் கணவருக்கு நாட்டு மக்கள் உரிய மரியாதை செய்ய வேண்டும். அவ்விரு வருக்கும் பிறக்கும் குழந்தைகளிடம் பிரிட்டிஷ் முடி ஒப்படைக்கப்படும். எனவே, பிரிட்டிஷ் மக்கள் ஆணாயினும் பெண்ணாயினும் தாங்கள் விரும்பிய பெண்ணையோ ஆணையோ மணந்து கொள்ள பிரிட்டிஷ் சட்டம் இடம் கொடுத்த போதினும் அரசராகவோ அரசியாகவோ வருபவர்கள் அரசாங் கத்தின் சம்மதத்தையும் பெற வேண்டும் என்ற நிபந்தனையும் ஏற்படுத்தப் பட்டுள்ளது.





பொருளடக்கம்

இதுபோல, திருமண விஷயத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் சில விதிவிலக்குகளுக்கு உட்படுத்தப்பட்டவர் களாக இருந்தனர்.

1. முஸ்லிம் அல்லாத எந்தப் பெண்ணையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்யலாகாது. ஏனைய முஸ்லிம்கள் இணை வைப்பவராக இல்லாத எந்தப் பெண்ணையும் திருமணம் செய்யலாம். விரும்பினால் வேதக்காரிகளை சாமான்ய முஸ்லிம்கள் திருமணம் செய்யலாம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வேதக்காரிகளையும் கூட திருமணம் செய்யலாகாது.

2. சாமான்ய முஸ்லிம்களின் மனைவியர் விதவை யாகிவிட்டாலும் விவாகரத்துச் சொல்லப்பட்டாலும் இதர முஸ்லிம்களை திருமணம் செய்து கொள்ள லாம். ஆனால், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மணந்து, அவர்களுடன் வாழ்க்கை நடத்திய பெண், மூமின்களுக்கு ஆத்மார்த்த தாய்மார்களாகி விடுகிறார்கள். எனவே, அவர்களை ஏனைய முஸ்லிம்கள் திருமணம் செய்யக்கூடாது.

وَأَزْوَاجُهُ أُمَّهَاتُهُمْ 33 : 6

இன்னும் அவருடைய மனைவியர் அவர் களின் தாய்மார்களாவர். *33:6*

وَلَآ تَنْكِحُوٓا أَزْوَاجَهُ مِنْ بَعْدِهِ أَبَدًا

إِنَّ ذَالِكُمْ كَانَ عِنْدَ اللّٰهِ عَظِيماً 33 : 53





பொருளடக்கம்

அவருடைய மனைவியரை எப்போதும் திருமணம் செய்யாதீர்கள். நிச்சயமாக இது அல்லாஹ்விடம் மிகப்பெரிய விஷயமாகும். 33:53

ஏனைய முஸ்லிம்கள் விரும்பினால் தங்கள் மனைவியரை விவாகரத்துச் செய்யலாம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களுடன் கூடி வாழ்ந்து, உடலுறவு கொண்ட மனைவியரை விவாகரத்துச் சொல்ல அனுமதிக்கப் படவில்லை.

ஏனைய முஸ்லிம்கள் மஹர் என்னும் திருமணக் கட்டணமின்றி எந்தப் பெண்ணையும் திருமணம் செய்யலாகாது. மஹர் என்னும் திருமணக் கட்டணத்தை உடனடியாகக் கொடுக்க வேண்டும். அல்லது மனைவிகேட்கும்போது கொடுக்க வேண்டும். திருமணமான பின்னர், மனைவி, மஹர் என்னும் திருமணக் கட்டணத்தை விரும்பினால் மன்னித்துவிடலாம். அல்லது கணவனிடமிருந்து அதனை வாங்கி, மீண்டும் கணவனுக்கே நன்கொடையளித்துவிடலாம். ஆனால், திருமணத் திற்கு முன்னர், அதனை வேண்டாம் என்று மன்னிக்க உரிமையில்லை. ஏனெனில், இக்கட்டணம் திருமணம் செய்த பிறகு தான் கடமையாக ஏற்படும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விஷயத்தில் இவ்விதி தளர்த்தப்பட்டி ருக்கிறது. ஒரு பெண், தன்னை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தன்னையே நன்கொடையாக அளிக்கலாம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விரும்பினால் வைத்துக்

கொள்ளலாம். அல்லது வேறு யாருக்கும் திருமணம் செய்து கொடுக்கலாம். அவர்களே மனைவியராக ஏற்றுக்கொண்டால் மஹர் என்னும் திருமணக் கட்டணத்தை அவளுக்குக் கொடுக்க வேண்டியது இல்லை.

*குறிப்பு : மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1795 காண்க.*

ஒன்றுக்கும் மேற்பட்ட மனைவியருள்ளவர்கள் எல்லோரிடமும் சமமாக நடந்துகொள்ள வேண்டும். அதில் பாரபட்சம் காட்டக் கூடாது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் முதல் மனைவி நீங்கலாக மற்ற எல்லா மனைவியரையும், இறைவனின் வஹீ என்ற அறிவிப்பின் படி மணந்ததால், உணவு, உடை, இருப்பிடம் கொடுப்பது நீங்கலாக உடலுறவு கொள்ளும் விஷயத்தில் சலுகை அளிக்கப்பட்டிருந் தார்கள்.

நான்கு மனைவியருக்கு மேல் மணக்கலாகாது என்ற பொதுவிதிவந்த போது, நான்குக்கும் மேற்பட்ட மனைவியர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இருந்தனர். அவர்கள் யாவரும் வஹீ என்னும் இறை கட்டளையின்படி திருமணம் செய்யப்பட்டிருந்த தால், அவர்களை விவாகரத்துச் செய்யமுடியாது. எனவே, அவர்களது நிலை இக்கட்டாகிவிட்டது. இதனை இறைவன் வேறொரு வசனத்தின் மூலம் நிவர்த்தி செய்தான். நான்குக்கும் மேற்பட்ட மனைவியர் இருந்தாலும் அவர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்





பொருளடக்கம்

விவாகரத்துச் செய்ய வேண்டியதில்லை. அவர்கள் யாவருக்கும் அன்னவஸ்திரம் கொடுப்பதில் நியாயமாக நடந்து கொள்ள வேண்டும். உடலுறவு கொள்வது மட்டும் நான்கு பேர்களுடன் இருக்கட்டும். அதற்குமேல் அதிகம் கூடாது. இவர்களையும் வசதிபோல் மாற்றிக் கொள்ளலாம் என்ற சலுகை அளிக்கப்பட்டது. இவ்விபரங்களை திருக்குர்ஆன் 4:3, 33:50-53 முதலியவற்றில் காணலாம். இதன்படி நான்கு பேர்களுடன் மட்டும் உடலுறவு கொண்டார்கள். மற்றவர்களுடன் இது ஒன்று நீங்கலாக மற்றைய காரியங்களில் நீதியாக நடந்துகொண்டார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உடலுறவு கொண்ட மனைவியர் மொத்தம் பதினோரு பேர்கள் தாம். இவர்களில் இருவர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் எதிரிலேயே இவ்வுலகை விட்டு மறைந்தார்கள். மீதி ஒன்பது பேர்களும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின்னரும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் துணைவியர்கள் என்ற அந்தஸ்துடன் வாழ்ந்து, அந்த மரியாதையுடன் இவ்வுலகை விட்டு மறைந்தார்கள்.

இவர்களையல்லாமல் இதர பெண்களையும் திருமணம் செய்ததாகவும் சிலரை விவாகரத்துச் செய்ததாகவும் ஹதீஸ்களிலிருந்து தெரிகிறது; அவர்கள் விபரம் வருமாறு:

பனூ ஹிலால் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண். இவர் தன்னை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நன்கொடை





பொருளடக்கம்

அளித்தவர். ஆனால், இவர்களுடன் கூடி வாழ்ந் தார்களா இல்லையா என்ற விபரம் தெரியவில்லை. தன்னை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நன்கொடையாக அளித்த ஒரு பெண்ணை, வேறு ஒரு ஸஹாபிக்கு திருமணம் செய்து கொடுத்த விபரம் தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி 1795 இலக்கமுள்ள ஹதீஸிலும் கூறப்பட்டிருக்கிறது.

உம்ரா (ரலி) என்ற பெண்ணை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்தார்கள். திருமணம் முடிந்ததும் மணப்பெண்ணின் தந்தை தன் புதல்வியைக் குறித்து "யா ரசூலல்லாஹ்! என் புதல்வி, இதுவரை எந்த நோய்க்கும் ஆளாகவில்லை என்று பெருமையாகக் கூறிக் கொண்டார். அதனைச் செவியுற்ற நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்; "அவ்வாறாயின், அந்த பெண்ணில் கைர் (நல்லது) இல்லை" என்று கூறி விவாகரத்துச் செய்துவிட்டார்கள்.

கந்தஹ் என்ற கோத்திரத்தைச் சேர்ந்த நுஃமானுப்னு ஷர்ஹீல் என்பவரின் புதல்வி அஸ்மா(ரலி) என்பவரை மணந்தார்கள். இப்பெண்ணுக்கு உமைமா என்ற மற்றொரு பெயருமுண்டு. இப்பெண் மீது பொறாமை கொண்ட சில பெண்கள் "நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன் பக்கத்தில் வரும்போது அஊதுபில்லாஹி மின்க அதாவது தங்களைவிட்டு அல்லாஹ்வைக் கொண்டு காவல் தேடுகிறேன் என்று நீ கூறினால், அவர்கள் மிகவும் மகிழ்ச்சியடைவார்கள்" என்று சொல்லி





பொருளடக்கம்

வைத்திருந்தனர். அப்பேதைப் பெண் அப்படியே சொல்லிவிட்டார்கள். பக்கத்தில் வந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பெரிய இடத்தில் பாதுகாப்புத் தேடிவிட்டாய் என்று கூறித்திரும்ப வந்து அந்தப் பெண்ணுக்கு இரண்டு துணிகளை அணிவித்து அவளுடைய குடும்பத்தாரிடம் சேர்த்துவிடுமாறு அபூ உஸ்யத் (ரலி) என்ற ஸஹாபிக்குக் கட்டளையிட்டார்கள்.

*குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1824 காண்க.*

ஹள்ரமவ்த்திலுள்ள வேறொரு பெண்ணை மணந்தார்கள். அவள் திருமதீனாவிற்கு வருவதற்கு முன்னதாகவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நோய் வாய்ப்பட்டார்கள். எனவே, அவள் விரும்பினால், வேறு ஆடவரை மணந்து கொள்ளலாம். இல்லையேல் உம்மஹாத்துல் முஃமினீன்களுடன் சேர்ந்து திரைக்கப்பால் இருந்து வாழட்டும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிட்டார்கள். அப்பெண் திருமதீனாவிற்கு வரவே இல்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவிற்குப் பின்னர், அபூ ஜஹ்லுடைய புதல்வர், இக்ரிமா (ரலி) அவர்களை மணந்து கொண்டாள்.

பனூ முர்த்திப்னி அவ்ப் கோத்திரத்தைச் சேர்ந்த வேறொரு பெண்ணை மணக்க நாடி, பெண் கேட்கப்பட்டது. அப்பெண்ணுக்கு வெண் குஷ்டம் இருப்பதாக அவளின் தந்தை பதிலளித்தார். எனவே, அவளை திருமணம் செய்யவில்லை.





பொருளடக்கம்

தந்தை தம் மகளிடம் வந்தபோது அவளுக்கு மெய்யாகவே வெண் குஷ்ட மிருப்பதைக் கண்டார்.

இவர்களைத் தவிர நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அடிமைப் பெண்கள் நால்வர் இருந்தனர்.

*1. எகிப்தரசர் அன்பளிப்புக் கொடுத்த மாரியத்துல் கிப்திய்யா (ரலி)*

*2. அன்னை ஜைனபு (ரலி) நன்கொடையளித்த அடிமைப்பெண்.*

*3. ரைஹானா பின்து அம்ரிப்னி ஜனாப் (ரலி).*

*4. ஜுலைக்கா (ரலி)*

இந்நால்வரில் மாரியத்துல் கிப்திய்யா (ரலி), ரைஹானா (ரலி) ஆகிய இருவருடனும் உடலின்பம் கொண்டார்கள். மற்ற இருவரிடம் உடலின்பங் கொள்ளவில்லை. அவ்விருவரும் பணி பெண்களாகவே கடைசி வரை இருந்தனர்.

எனவே, நபி (ஸல்) அவர்களின் துணை வியர்கள் பதினோரு பேர்களில் இவ்வுலகை விட்டு மறைந்த இருவர் நீங்கலாக மீதமுள்ள ஒன்பது பேர்களுக்கும் திருமதீனாவில் மஸ்ஜிதுந் நபவிய்யின் அருகில் ஒன்பது வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டு, அவற்றிலேயே அவர்கள் வாழ்ந்தனர். மாரியத்துல் கிப்திய்யா (ரலி) ரைஹானா (ரலி) ஆகிய இருவரும் அடிமைப் பெண்களாக இருந்ததால், அவர்களுக்கு திருமதீனா நகருக்கு வெளியில் வீடு கொடுக்கப் பட்டன. அவர்கள் திரைகளுக்கப்பால் வைக்கப் படவில்லை. திருமதீனாவிற்கும் மஸ்ஜிதுந் நபவிக்கும் உம்மஹாத்துல் முஃமினீன்களிடமும்





பொருளடக்கம்

அப்பெண்கள் வருவார்கள். எனவே, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதினோரு பெண்களுடன் உடலின்பம் கொண்டிருக்கிறார்கள். அடிமைப் பெண்ணாகவோ, நன்கொடையளித்தோ திருமணத்தின் மூலமோ மனைவியானவர்கள் மொத்தம் முப்பது பேர்கள். இவர்களில் பதினோரு பேர் தான் வாழ்க்கைத் துணைவியரானார்கள். மற்றவர்கள் அப்படியாகாததால், அவர்களைப் பற்றிய விரிவான விபரங்களை வரலாற்றாசிரியர்களில் பெரும்பாலர் கவனிப்பதில்லை.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு, ஒன்றுக்கும் மேற்பட்ட மனவியர் இருந்ததைக் குறித்து, இஸ்லாம் மார்க்கத்திற்கு எதிராக உள்ளவர்கள் குறை கூறுகின்றனர். அடிமை வழக்கத்தை ஒழிக்க வேண்டும் என்ற கிளர்ச்சி ஐரோப்பாவில் கடந்த பத்தொன்பதாவது நூற்றாண்டில் தான் ஏற்பட்டது. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் நிறைவேற்றிய ஒரு சட்டத்தின் மூலம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு கட்டுப்பட்டிருந்த இந்தியா போன்ற நாடுகளிலும் அடிமை ஒழிப்புச் சட்டம் அமலில் கொண்டு வரப்பட்டது. இச்சட்டம் பாராளுமன்றத்தில் செய்யப்பட்டதேயன்றி, மதத்தில் செய்யப் பட்டதல்ல. இச்சட்டத்தைத் தழுவி, காதியானிகள் தங்கள் தப்ஸீர்களிலும் வரலாறுகளிலும் குதர்க்கமான விளக்கங்களை எழுதி இருக்கின்றனர். இவற்றைப் பற்றி தனி தலைப்பின் கீழில் இன்ஷா அல்லாஹ் பின்னர் விவரிக்கப்படும். எனவே, இங்கு உம்மஹாத்துல் முஃமினீன்களைப் பற்றிய விவரங்களை எழுதுவோம்.





பொருளடக்கம்

# (1) அன்னை கதீஜா (ரலி)

அன்னை கதீஜத்துல் குப்ரா (ரலி) பின்து குவைலிதிப்னி அஸதிப்னி அப்தில் உஸ்ஸப்னி குஸய்யி அவர்கள், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நான்காவது பாட்டனாரின் பேரர் அஸத் என்பவரின் பேத்தியாவார். அவருடைய தந்தை, அரப் நாட்டிலுள்ள பிரபல வியாபாரிகளிலும், குறைஷியரில் கண்ணியம் வாய்ந்தவர்களிலும் ஒருவராவார். தாயாகிய பாத்திமா பின்து ஜாயிதா என்பவரின் வம்சம், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மூதாதையரில், ஒன்பதாவது தலைமுறையில் லுவய்யு என்பவரில் ஒன்று சேருகிறது.

அன்னை கதீஜா (ரலி) அவர்களை அத்தீக்குப்னு ஆயித் என்பவர் திருமணம் செய்தார். இவருக்குக் குழந்தை பிறக்கவில்லை. இவருக்குப் பின்னர் அபூஹாலா ஹிந்த் இப்னு நப்பாஷ் தமீமீ என்பவர் திருமணம் செய்தார். மூன்று புதல்வர்கள் பிறந்தனர். இவ்விரண்டாவது கணவர் இறந்த பின்னர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், மூன்றாம் முறையாக திருமணம் செய்தார்கள். அன்னை கதீஜா (ரலி) அவர்களுக்கு, இது மூன்றாவது திருமணமாக இருந்தபோதினும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இது முதல் திருமணமாகும். அச்சமயத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வயது இருபத்தைந்து. அன்னை (ரலி) அவர்களுக்கு வயது நாற்பது. இருபத்தெட்டு வயதினர் என்று ஒரு செய்தி இருக்கிறது என்றாலும், நாற்பது வயது





பொருளடக்கம்

என்பதையே எல்லா வரலாற்று அறிஞர்களும் உறுதியாகக் கூறி இருக்கிறார்கள். இருபத்தெட்டு வயது என்ற சொல்லை எவரும் உறுதிப்படுத்த வில்லை.

அன்னை (ரலி) அவர்களுடைய இம்மூன்றாவது திருமணத்தின் போது, குவைலித் வாழ்ந்து கொண்டிருந்தபோதினும், அவருடைய சகோதரர் அம்ருப்னு அஸத் என்பவர்தான், தன் சகோதரரின் புதல்வியின் சார்பாக, திருமண ஒப்பந்தத்தில் சம்பந்தப்பட்டு, சம்மதம் தெரிவித்தார். இந்த திருமணத்தைத் தூண்டியவர் அன்னை கதீஜா (ரலி)

இத்திருமணத்திற்குப் பின்னர் நபி (ஸல்) அவர்களுக்கு ஜீவனோபாயத்தைப் பற்றிய கவலை நீங்கிவிட்டது. இறை தியானத்திலும், வணக்கத் திலும் பூரணமாக ஈடுபட்டு விட்டார்கள். பசி தாகங்களைத் தணிக்கும் பொருள்களுடன் ஹிரா மலைக் குகைக்குச் சென்று தனித்திருந்து வணங் குவதும் கொண்டுபோன பொருள்கள் செலவான பின்னர், வீட்டிற்கு வந்து சில நாட்கள் தங்குவதும், பின்னர் மீண்டும் செல்வதுமாக இருந்தார்கள். இதனைப் பற்றிய விரிவான விவரத்தை மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் முதல் பாகத்தில் காணலாம்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நபிப் பதவி வருவதற்கு முன்னரும் கூட அன்னை கதீஜா (ரலி) அவர்களின் ஒழுக்கங் களைப் பாராட்டும் முறையில் தாஹிரா (பரிசுத்த வதி) என்ற சிறப்புப் பெயர் இருந்தது. நபித்துவம் வந்தவுடன், முதன்முதலாக இஸ்லாத்தைத் தழுவிய





பொருளடக்கம்

வர் இவர் தான். இவருக்கு முன்னர் வேறு யாரும் இஸ்லாத்தைத் தழுவவில்லை.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹிரா மலைக் குகையில் நபித்துவத்தை அடைந்து, வீடு திரும்ப வந்து நடந்தவற்றைக் கூறி ''என் உயிருக்கு நான் அஞ்சுகிறேன்'' என்று அறிவித்தபோது, இல்லை, இல்லை, அல்லாஹ் தங்களை ஒருபோதும் வீணாக்கமாட்டான். தாங்கள் உறவினர்களை ஆதரிக்கிறீர்கள், இல்லாதவருக்காக சம்பாதிக்கிறீர்கள், இயலாதவருக்கு உதவி புரிகிறீர்கள், நற்காரியங்களுக்கு ஆதரவளிக்கி றீர்கள்'' என்று கூறித் தேற்றினார்கள்.

பின்னர் தம்முடைய ஒன்றுவிட்ட சகோதரரான வரக்கத்துப்னு நௌபல் என்பவரிடம் அழைத்துச் சென்று விஷயத்தை விளக்கி வைக்க முயற்சி எடுத்துக் கொண்டார். இவ்விபரம் மௌலானா அவர் களால் மொழி பெயர்க்கப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல் லாஹ் முதல் பாகம், நபித்துவம் பெறல் என்ற தலைப்பில் காணலாம்.

இவ்வுலகிலுள்ள நான்கு பரிசுத்த பெண்களில் அன்னை கதீஜா (ரலி) அவர்களையும் ஒருவராக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கணித்திருக்கிறார்கள்.

அன்னை கதீஜா (ரலி) அவர்களின் குணாதி சயங்களைப் பற்றி, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம்மிடம் கூறியதாக, அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் பின்வருமாறு அறிவித்தார்கள்.

''என்னை மக்கள் நிராகரித்துக் கொண்டி





பொருளடக்கம்

ருந்தபோது, என்னை விசுவாசித்தார். என்னை மக்கள் பொய்ப்பித்துக் கொண்டிருந்தபோது, என்னை அவர் உண்மைப்படுத்தினார். மனிதர்கள் என்னைச் சம்பாதிக்கவிடாமல் தடுத்த போது, தன்னுடைய செல்வத்தில் என்னைக் கூட்டாக்கிக் கொண்டார். எனக்கு அவருடைய வயிற்றில் மக்களை இறைவன் தந்தான்; மற்றைய மனைவி யரிடம் தரவில்லை.''

*குறிப்பு : மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1530 காண்க.*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சந்திக்க முஜ்னீ கோத்திரத்தைச் சேர்ந்த ஹஸ்ஸானா என்ற மூதாட்டி வந்தாள். அவளிடம் மிகவும் பரிவுகாட்டி அவருடைய நலன்களை விசாரித்துக் கொண்டிருந்தார்கள். எங்களை விட்டுச் சென்றபின்னர், உங்கள் வாழ்வுதாழ்வு எப்படி? என்று, அளவளாவிக் கொண்டு இருந்தார்கள். அவள் சென்ற பின்னர் ''அந்த மூதாட்டி யார்? அவளுடன் இவ்வளவு அனுதாபமாக விசாரித்துக் கொண்டு இருந்தீர்களே'' என்று அன்னை ஆயிஷா ஸித்தீக்கா(ரலி) அவர்கள் வினவினார்கள்: அதற்கவர்கள் ''அவள் கதீஜாவின் தோழி; கதீஜாவிடத்தில் அவளுக்கு அளவற்ற அன்பு'' என்று பதில் அளித்தார்கள்.

ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, ''இதோ கதீஜா தங்களுக்கு ஒரு பாத்திரத்தில் உணவு கொண்டு வருகிறார். அவர் வந்தஉடன் ரப்புல் ஆலமீன் உனக்கு ஸலாம்





பொருளடக்கம்

சொல்கிறான். அத்துடன் நானும் ஸலாம் சொல்கிறேன்'' என்று அறிவித்ததுடன் அவருக்காக சுவர்க்கத்தில் மரகதத்தால் ஒரு மாளிகை இருக்கிறது. அதில் கவலையோ வேதனையோ இல்லை என்ற நற்செய்தியையும் கூறுவீராக என்று அறிவித்த ஹதீஸ் மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1531ல் கூறப்பட்டுள்ளது. இவ்வுலகிலுள்ள வேறு எந்தப் பெண்ணுக்கும் அல்லாஹுதஆலா ஸலாம் சொன்னதாகத் தெரியவில்லை. இந்தப் பேறு அவர் ஒருவருக்குத்தான் கிடைத்திருக்கிறது.

## அன்னை (ரலி) அவர்களின் குழந்தைகள்

*1.* ஹாலா, தாஹிர், ஹிந்த் இம்மூவரும் அன்னை அவர்களின் வயிற்றில் அபூ ஹாலாவிற்குப் பிறந்தவர்கள்.

**ஹாலா (ரலி):** ஒருமுறை இவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் வருவதற்கு அனுமதி கோரினார். அவருடைய பெயரைக் கேட்ட மாத்திரத்தில் ''அல்லாஹும்ம ஹாலா'' (நாயனே ஹாலாவா) என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1532 காண்க.

இவருடைய புதல்வர் பெயர் ஹிந்த் என்பதாகும். இவரும் ஸஹாபி தான். தமது தாயார் ஹாலா (ரலி)





பொருளடக்கம்

தமக்கு அறிவித்தாக ஒரு ஹதீஸை அறிவிப்புச் செய்தும் இருக்கிறார்.

**தாஹிர்** (ரலி): இவர் யமன் நாட்டில் நாலில் ஒரு பகுதிக்கு அதிபதியாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் நியமிக்கப்பட்டு, அவர்களது மறைவு வரையில் அந்தப் பதவியிலேயே இருந்தார். இவருடைய அதிகாரத்தின் கீழில் அக், அஷ்அரீ ஆகிய கோத்திரங்களிருந்தன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவுக்குப் பின் யமன் நாட்டில் முதன் முதலாக புரட்சி செய்தவர்கள் இந்தக் கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் தான். இவர்களை எதிர்த்துப்போரிடும்படி இவருக்கு கலீபா அவர்கள் கட்டளையிட்டார்கள். மஸ்ருக் இப்னுல் அஜ்தஃ (ரலி) என்பவரின் துணையுடன் புரட்சிக் காரர்களை அவர் எதிர்த்துப் போரிட்டு மகத்தான வெற்றி பெற்றார். புரட்சி அடக்கப்பட்டது.

**ஹிந்த்** (ரலி): இவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் வளர்க்கப் பட்டவர். ரபீபுன்னபீ என்று இவரைப் பற்றி ஸஹாபீகள் கூறுவர். அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களுக்கும், கலீபா அலீ (ரலி) அவர்களுக்கும் பஸராவில் நடந்த ஜமல் போரில் இவர் கலீபா அலீ (ரலி) அவர்கள் கட்சியில் சேர்ந்து போரிட்டு அங்கு ஷஹீதானார்கள்.

நாவன்மை மிக்கவர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சாமுத்திரிகா இலட்சணங்களைக் கூறுவதில் வல்லவர்.

இவருடைய புதல்வரின் பெயரும் ஹிந்த் என்பது





பொருளடக்கம்

தான். இவர் பஸராவில் மறைந்தார். அக்காலத்தில் அங்கு வைசூரி மிக பலமாகப் பரவி இருந்தது. மக்கள் தங்களில் இறந்தவர்களை அடக்கம் செய்வதிலேயே முற்றும் கவனமாக இருந்தனர். இவருடைய சடலத்தைத் தூக்குவதற்கு நான்கு பேர்கள் மட்டும் தானிருந்தனர். இதனைப் பார்த்த ஒரு பெண் வாஹ் ஹிந்து இப்னு ஹிந்த், வாஹ் இப்னு ரபீபிர் ரசூல் (ஆவோ ஹிந்தின் புதல்வர் ஹிந்த். ஆவோ ரசூலின் வளர்ப்புப் பிள்ளையின் புதல்வர்) என்று சப்தமிட்டாள். இதனைக் கேட்ட யாவரும் இறந்தவர்களை விட்டுவிட்டு இவரிடம் வந்து குழுமிவிட்டனர். அன்று முழுவதும் கடைத்தெருவில் கடையடைப் பிருந்தது.

நபி (ஸல்) அவர்களின் புதல்விகள் யாவரும் அன்னை (ரலி) அவர்களின் வயிற்றில் பிறந்தவர் கள். அவர்களைப் பற்றிய விவரம் மௌலானா அவர் களால் எழுதப்பட்ட பெருமானாரின் பரம்பரை எனும் நூலில் கூறப்பட்டுள்ளது.

## உறவினர்கள்

அன்னை (ரலி) அவர்களுக்கு ஹாலா, ரக்கீக்கா என்று இரண்டு சகோதரிகளும், அவாம் என்று ஒரு சகோதரரும் இருந்தனர்.

ஹாலா (ரலி)யின் புதல்வரான அபுல் ஆஸிப்னு ரபீஉ (ரலி) என்பவருக்குத்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மூத்த புதல்வி ஸித்தி ஜ்ஜனபு (ரலி) அவர்கள் திருமணம் செய்து வைக்கப்பட்டிருந்தார்கள். இவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முதல் மருமகன்.





பொருளடக்கம்

ரக்கீக்கா என்பவரின் வயிற்றில் பிறந்த உமைமா பின்து அப்த் (ரலி) என்பவர் பெண் ஸஹாபி. இவ்வம்மை கூறியதாக இவரின் புதல்வி ஹக்கீமா (ரஹ்) முஹம்மதுப்னுல் முன்கதிர் (ரஹ்) ஆகியவர்கள் ஹதீஸ்களை ரிவாயத்துச் செய்திருக்கின்றனர்.

அவாம் என்பவர் அன்னை (ரலி) அவர்களுடன் பிறந்த சகோதரர். இவருக்கு நபி (ஸல்) அவர்களின் மாமி ஸபிய்யா (ரலி) திருமணம் செய்து வைக்கப் பட்டிருந்தார்கள். இவ்விருவருக்கும் பிறந்தவர் தான் சுவர்க்கவாதி என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் நற்செய்தி சொல்லப்பட்ட ஜுபைருப்னு அவாம் (ரலி) என்பவராவார். இவருக்கு ஒரு சகோதரர் இருந்தார். அவர் பெயர் ஸாயிப் என்பது. அவரும் ஸஹாபியாவார்.

அன்னை (ரலி) அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் 24 வருடம் 6 மாதம் அல்லது 25 வருடங்கள் சேர்ந்து வாழ்ந் தார்கள். திருமக்காவில் நபித்துவ வருடம் 10 வது ஆண்டில் மறைந்து ஜன்னத்துல் முஅல்லாவில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

# 2) அன்னை ஸௌதா (ரலி)

அன்னை ஸௌதா பின்து ஜம்அத்தப்னி கைஸிப்னி அப்திஷ் ஷம்ஸிப்னி அப்தூதிப்னி நபரிப்னி மாலிக்கிப்னி ஹஸனிப்னி ஆமிரிப்னி லுவய்யி (ரலி). நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முன்னோர்களில் ஒன்பதாவது தலைமுறையில் ஒன்று சேருகிறார். இவருடைய தாயார் ஷுமூஸ் பின்து கைஸ் என்பவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பூட்டனாரின் மனைவி ஸல்மாவின் சகோதரரின் புதல்வியாவார்.

(இவர் ஸக்ரானுப்னு அம்ரிப்னி அப்தூத் (ரலி) என்பவருக்கு திருமணம் செய்து வைக்கப்பட்டிருந்தார். இவர் முதலாவதாக இஸ்லாத்தைத் தழுவினார். பின்னர் தன் கணவருக்கு உபதேசம் செய்து அவரையும் இஸ்லாத்தைத் தழுவச் செய்தார். பின்னர் தனது தாயார் ஷுமூஸுனுடனும், கணவருடனும் சேர்ந்து அபிசீனிய நாட்டிற்கு ஹிஜ்ரத்துச் செய்தார். அபிசீனியாவிலிருந்து மக்காவிற்குத் திரும்ப வந்த சில நாட்களில் கணவர் ஸக்ரான் (ரலி) மறைந்துவிட்டதால் விதவையானார். அன்னை கதீஜா (ரலி) அவர்கள் மறைந்த அதே வருடத்தில், அவருடைய கஷ்டங்களுக்கும் சிரமங்களுக்கும் மதிப்பளித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்து கொண்டார்கள்.)

சில வருடங்கள் வரையில் கூடி வாழ்ந்து விட்டு, தம்முடன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சயனிக்கிற முறையை, அன்னை ஆயிஷா





பொருளடக்கம்

ஸித்தீக்கா (ரலி) அவர்களுக்கு விட்டுக் கொடுத்து விட்டார். காதலைக் கூட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிரிய மனைவிக்காக விட்டுக் கொடுக்கும் பெரும் மனம் படைத்திருந்தார்.)

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ்ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1127 காண்க.

## உறவினர்கள்

*1.* **மாலிக்குப்னு ஜம்ஆ** (ரலி). அன்னை (ரலி) அவர்களின் தாய்க்கும் தந்தைக்கும் பிறந்த சகோதரர். இவர் ஆரம்ப காலத்திலேயே இஸ்லாத்தைத் தழுவியதுடன் தம்மனைவி உம்ரத்து பின்து ஸஃதல் ஆமிரிய்யா (ரலி) உடன் அபிசீனியாவிற்கு ஹிஜ்ரத்துச் செய்தார்.

*2.* **அப்துர்ரஹ்மான்** (ரலி) *3.* **அப்து** ஆகிய இருவரும் அன்னை (ரலி) அவர்களின் தந்தைக்குப் பிறந்த சகோதரர்கள்.

*4.* **கர்லித்துப்னு அப்து அம்ர்** (ரலி). அன்னை (ரலி) அவர்களின் தாய் பெற்ற சகோதரர்.

அன்னை (ரலி) அவர்களும், அவர்களின் குடும்பத்தினரும், ஆரம்பகால முஸ்லிம்கள் என்பதற்காகவும் அவர்கள் யாவரும் அபிசீனிய நாட்டிற்கு ஹிஜ்ரத்துச் செய்து இஸ்லாத்திற்காக பல துன்பங்களை ஏற்றுக்கொண்டவர்கள் என்பதற்காகவுமே இவரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மணந்தார்கள்.

அன்னை (ரலி) அவர்கள், நற்குண நல்லொழுக்கங்களில், ஆரம்ப காலம் முதல் பிரசித்தி பெற்றவர். இரண்டாவது கலீபா ஹளரத் உமர் பாரூக் (ரலி) அவர்களின் கிலாபத் ஆட்சியின் கடைசியில் இவ்வுலகை விட்டு மறைந்தார்.

அறிவிப்புகள்: இவரால் ஐந்து ஹதீஸ்கள் ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றில் ஒன்று ஸஹீஹுல் புகாரியிலும், மீதி நான்கு ஹதீஸ்கள், நான்கு ஸுனன்களிலும் எழுதப்பட்டிருக்கின்றன.

ஹளரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில், ஹிஜ்ரீ 54ம் வருடம் ஷவ்வால் மாதம் மறைந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. திருமதீனாவில் ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்.

ஒருமுறை ஹளரத் உமர் (ரலி) ஒரு பையை அனுப்பினார்கள். அதில் என்ன இருக்கிறது என்று அதனைக் கொண்டு வந்தவரிடம் வினவினார். அப்பொழுது, "பேரீத்தம்பழப் பையில் திர்ஹமை அனுப்புகிறீர்களோ" என்று கூறிவிட்டு, அப்போதே அதிலுள்ள யாவற்றையும் தர்மம் செய்து விட்டார்கள்.

இவருடைய முதல் கணவர் ஸக்ரான் (ரலி)க்குப் பிறந்த ஒரு புதல்வர் இருந்தார். அவர் பெயர் அப்துர்ரஹ்மான் (ரலி). ஜலூலாவில் பாரசீகர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் நடந்த போரில் ஷஹீதானார்.

அன்னை கதீஜா (ரலி) அவர்களின் மறைவிற்குப் பின்னர் ஒரு நாள் நபி ஸல்லல்லாஹு அலைஹி





பொருளடக்கம்

வஸல்லம் அவர்கள் கவலையுடன் வீற்றிருப்பதை கௌலா பின்து ஹக்கீம் (ரலி) பார்த்து "தங்களுக்கு வாழ்க்கைத் துணைவிக்கு அவசியமிருக்கிறதோ?" என்று வினவினார். அதற்கவர்கள் "ஆம்" வீட்டுக் காரியங்களையும், குழந்தைகளின் பராமரிப்பையும் கதீஜாவே செய்து கொண்டிருந்தார்" என்று கூறினார்கள்.

குடும்பத்தில் பெண் மக்களிருந்தனர். முதல் புதல்வி நீங்கலாக மற்றைய மூன்று புதல்வி களையும் கவனிப்பதற்கு ஒரு பெண் தேவையாக இருந்தது. பெண் மக்களைப் பராமரிப்பது ஆண்களால் இயலாத காரியம். பெண்கள் தான் அவர்களைச் சரியான முறையில் கவனிக்க இயலும். எனவே, தங்கள் செல்விகள் விஷயத்தில் கவலை கொண்டிருப்பதை முற்கூறப்பட்ட கௌலா பின்து ஹக்கீம் (ரலி) கவனித்து, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை வினவி இருக்கக் கூடும். "ஆம்; தேவைதான்" என்ற பதில் கிடைத்துவிட்டதால், அதே பெண் ஸஹாபி, சௌதா பின்து ஜம்ஆ (ரலி)யை நினைவூட்டி, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருப்தியைத் தெரிந்து, அன்னை (ரலி) அவர்களின் தந்தை ஜம்ஆவிடம் சென்று திருமணம் சம்பந்தமாக முறைப்படி பேசினார். முஹம்மது சிறந்தவர் தான். சம்பந்தம் செய்வதற்கு தகுதியுள்ளவர் தான். என்றாலும், பெண்ணுடைய சம்மதமும் தெரிய வேண்டுமே என்று தமது சம்மதத்தைத் தெரிவித்தார்.

பின்னர், அன்னை (ரலி) அவர்களிடம் சென்று விஷயத்தைக் கூறி, சம்மதம் கோரப்பட்டது.





பொருளடக்கம்

அவரும் சம்மதித்தார். திருமணம் நடந்தது. இப்பேச்சுவார்த்தைகளும் திருமண நிகழ்ச்சியும், அன்னை (ரலி) அவர்களின் சகோதரர் அப்துல்லாஹ்றவிற்கு தெரியவந்தன. அச்சமயத்தில் அவர் இஸ்லாத்தைத் தழுவவில்லை. எனவே, இத்திருமணத்தைக் குறித்து கவலை தெரிவித்து, தன் தலையில் மண்ணை வாரிப்போட்டுக் கொண்டார். பின்னர், அவர் இஸ்லாத்தைத் தழுவிய பிறகு தம்முடைய இச்செய்கைக்காக வருந்திக் கொண்டேயிருந்தார்.

அன்னை சௌதா (ரலி) அவர்களின் திருமணமும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் திருமணமும் ஒரே ஆண்டில் சமீபமாக நிகழ்ந்த தால், இவ்விரு திருமணங்களிலும் எது முந்தியது என்பதை வரலாற்று ஆசிரியர்கள் உறுதியாக உரைக்க முடியவில்லை. அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களின் திருமணம் தான் முந்தியது என்று கூறுவோரும் உளர்.

அன்னை சௌதா (ரலி) தடிப்பமாகவும் உயரமாகவும் இருப்பார்கள். எனவே, வேகமாக நடப்பது அவருக்குச் சற்று சிரமம். எனவே, ஹஜ்ஜத்துல்விதாவின் போது முஸ்தலிபாவில் பத்தாவது இரவைக் கழிக்கும் போது அதிகாலையில் மற்றவர்களுடன் சேர்ந்து செல்வதில் அவருக்குச் சிரமம் ஏற்படும் என்பதைக் கருதி, நடு இரவிற்குப் பின்னர் அவரை மினாவிற்குச் செல்லுமாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனுமதித்த விபரம் மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 808ல் காணலாம்.





பொருளடக்கம்

பர்தாவைப் பற்றிய கட்டளை வருவதற்கு முன்னர், பெண்கள் இரவு நேரங்களில் மந்தைக்குச் சென்று மல உபாதை கழிப்பது வழக்கம். ஒரு இரவில் அன்னை சௌதா (ரலி) அவர்கள் இதர பெண்களுடன் சேர்ந்து மந்தைக்குச் சென்றதை ஹளரத் உமர் (ரலி) அவர்கள் பார்த்து ''சௌதாவே உன்னை அடையாளம் கண்டுவிட்டேன்'' என்று கூறியதாகவும், இச்சம்பவத்திற்குப் பின் பர்தாவின் கட்டளை வந்ததாகவும் கூறுவர். இக்கட்டளை வருவதற்குப் பல சந்தர்ப்பங்கள் கூறப்பட்டிருக் கின்றன. அவற்றில் இதுவும் ஒன்று என்று சன்மார்க்க அறிஞர்கள் கூறியுள்ளார்கள்.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ்ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1717 காண்க.

# (3) அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி)

ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் முதலாவது கலீபா ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களுக்கும் உம்மு ரௌமான் ஜைனபு (ரலி) அவர்களுக்கும் பிறந்தவர். நபித்துவகாலம் 12 ம் வருடத்தில் இவருக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் திருமணம் செய்யப்பட்டு, ஹிஜ்ரி 2ம் வருடத்தில் 9வது வயதில் கணவர் வீட்டிற்கு அனுப்பப்பட்டார்கள்.

(உம்மஹாத்துல் முஃமினீன்களில் இவர் ஒருவர் தான் முஸ்லிமான பெற்றோர்களுக்கு இஸ்லாத்தில் பிறந்த கன்னிப் பெண். மற்றவர்கள் யாவரும் முதல் திருமணம் செய்யப்பட்டு இரண்டாவது அல்லது மூன்றாவது திருமணத்தின் மூலம் அன்னையர் களானவர்கள். அவர்களில் சிலருக்கு குழந்தை களுமிருந்தனர். அன்னை ஸபிய்யா (ரலி) அவர்க ளும் நபித்துவத்திற்குப் பின்னர் பிறந்தவர்கள். ஆயினும், அவர்களுடைய பெற்றோர்கள் முஸ்லிம்களல்லர். மற்றவர்கள் யாவரும் நபித்து வத்திற்கு முன்னர் பிறந்தவர்கள்.

''மூன்று இரவுகள் உன்னை நான் கனவில் கண்டேன். வெண்பட்டில் உன் உருவத்தைச் சுற்றி மூடி ஒரு வானவர் என்னிடம் கொண்டு வந்து, இவர் உமது மனைவி என்று என்னிடம் கூறினார்கள். நான் திறந்து பார்த்தபோது உன் உருவமாகவே இருந்தது. இது (இவ்வறிவிப்பு) அல்லாஹ்விடமிருந்து வந்ததாக இருக்குமாயின் அதனை அவனே நடத்தி வைப்பான் என்று நான் சொல்லிக் கொண்டிருந்தேன்



பொருளடக்கம்

என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக புகாரி, முஸ்லிம் ஆகிய இரு கிரந்தங்களிலும் எழுதப்பட்டிருக்கிறது.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1548 காண்க.

**அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களை திருமணம் செய்ய அல்லாஹ்விடமிருந்து உத்தரவு வந்தது என்பது இந்த ஹதீஸிலிருந்து தெரிய வருகிறது.**

## பக்தி சோதிக்கப்படல்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அன்னை (ரலி) அவர்களுக்கு எவ்வளவு பக்தியும் அன்பும் இருக்கிறதென்பதைக் குறித்த பரீட்சைக்கும் உட்பட வேண்டிய திருந்தது. அன்மார் போரின் போது அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் மீது அவதூறு ஏற்பட்ட விபரம் மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் இரண்டாம் பாகத்தில் விபரமாக எழுதப்பட்டிருக்கிறது.

இதனைக் குறித்து அன்னை (ரலி) அவர்களிடம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நேரில் வினவிய போது, அன்னை (ரலி) அவர்கள் ஆத்திரமடையாமல் அமைதியுடன் அளித்த அற்புதமான பதில் பெண் வர்க்கத்தினர் கடைப் பிடிக்க வேண்டிய ஒன்றாகும்.

"நான் நிரபராதி என்று கூறுவேனாயின் என்னை





பொருளடக்கம்

நீங்கள் நம்பமாட்டீர்கள். நான் நிரபராதி என்று அல்லாஹ் அறிந்துள்ள ஒரு காரியத்தை நான் செய்ததாக ஏற்றுக்கொண்டால், என்னை நீங்கள் நம்புவீர்கள். எனவே, அல்லாஹ்வின் மீது பிரமாணமாக, யூசுப் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் தந்தை,

فَصَبْرٌ جَمِيلٌ وَاللَّهُ الْمُسْتَعَانُ عَلَى مَا تَصِفُونَ

அழகான பொறுமை, மேலும், நீங்கள் வர்ணிப்பதைப் பற்றி அல்லாஹ்தான் உதவி தேடப்படுபவன் என்று யூசுப் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் தந்தை கூறிய சமயத்தில் அவர் இருந்த நிலை தான் எனக்கும், உங்களுக்குமிடையில் இருக்கிறது. இதைத் தவிர வேறு உதாரணத்தை நான் காணவில்லை'' என்று கூறினார்கள். அன்னை(ரலி) நிரபராதி என்ற அறிவிப்பு ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மூலம் அல்லாஹ் விடமிருந்து வந்தது. இவ்வறிவிப்பின் மூலம் பொதுமக்கள் உட்பட யாவரும் திருப்தியடைந்தனர். அன்னை (ரலி) அவர்களின் உயர்வு, யாவருடைய ' உள்ளங்களிலும் உறுதியாயிற்று. நிரபராதியாக இருந்தும் கூட, பொறாமைக்காரர்களின் கூற்றுகளைப் பொறுமையுடன் சகித்துக்கொண்டு அடக்கமாக இருந்ததன் பலன், இறுதிநாள் வரையில் ஓதப்படக்கூடிய விதமாக திருமறையிலேயே அவர்களின் துன்பவாழ்வு துலக்கப்பட்டிருக்கிறது.

ஆண்களில் ஏராளமானவர் காமில் (ஆத்மார்த்த உன்னதங்களில் பரிபூரண நிலையை அடைந்தவர்)





பொருளடக்கம்

கள் இருக்கின்றனர். பெண்களில் இம்ரானுடைய புதல்வி மர்யம், பிர்அவ்னின் மனைவி ஆஸியா, ஆகியவர்களைத் தவிர வேறு யாரும் காமிலாக வில்லை. இதர உணவுகளைப் பார்க்கினும் திக்கடி என்னும் உணவிற்கு இருக்கும் சிறப்பைப் போல, இதர பெண்களைப் பார்க்கினும் ஆயிஷாவிற்கு சிறப்பிருக்கிறது'' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக அபூமூஸா அல் அஷ்அரி (ரலி) அறிவித்த ஹதீஸ் தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1385ல் இடம் பெற்றிருக்கிறது. இதே ஹதீஸை அனஸுப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்ததாக மற்றோர் ஹதீஸும் புகாரியில் எழுதப்பட்டி ருக்கிறது.

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களுக் கிருந்த ஆத்மார்த்த உன்னதங்கள் காரணமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத் தில் நெருக்கமான அந்தஸ்திருந்தது. இதனைக் குறித்து "உங்களில் ஆயிஷாவை தவிர்த்து வேறு எந்தப் பெண்ணின் விரிப்பிலும் நான் இருக்கும் போது எனக்கு வஹீ அறிவிக்கப்படவில்லை'' என்று உம்மஹாத்துல் முஃமினீன்களிடத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்கள் அறிவித்து உள்ளார்கள். இந்த ஹதீஸை இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் தம்முடைய நூலில் எழுதியுள்ளார்கள்.

உம்மஹாத்துல் முஃமினீன்களில் அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களிடத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்





பொருளடக்கம்

தங்கும்போது ஸஹாபிகள் அன்பளிப்புகளை அனுப்பி வந்தனர். இந்தப் பாகுபாட்டை ஸஹாபிகள் செய்யக் கூடாது என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவிக்க வேண்டும் என்று கூறும்படி செய்ய ஸித்தி பாத்திமா (ரலி) அவர்களை உம்மஹாத்துல் மு.்.மினீன்களில் சிலர் தூது அனுப்பினர். இதனை ஸித்தி (ரலி) அவர்கள் தங்கள் தந்தையிடம் அறிவித்த போது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அருமை மகளே, நான் நேசிப்பதை நீயும் நேசிக்கமாட்டாயா? என்று வினவினார்கள். அதற்கவர் "ஆம்; நேசிப்பேன் என்று பதிலளித்தார். அவ்வாறாயின், இவளை நீ நேசி என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். இந்த விவரம் முஸ்லிமில் எழுதப்பட்டிருக்கிறது. தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1121லும் காணலாம்.

ஜிப்ரயீல் உமக்கு ஸலாம் சொல்கிறார் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அவருக்கும் ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் என்று அன்னை (ரலி) பதிலளித்த தாகவும் மற்றோர் ஹதீஸில் எழுதப்பட்டிருக்கிறது.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1322ல் காண்க.

அன்னை கதீஜா (ரலி) அவர்களுக்கு அல்லாஹ் வும் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாமும் ஸலாம் சொன்னார்கள். அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களுக்கு ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம்





பொருளடக்கம்

அவர்கள் ஸலாம் சொன்னார்கள். இந்தச் சிறப்பு மற்றவர்களுக்கு இல்லை.

உளூச் செய்வதற்குப் பதிலாக தண்ணீர் இல்லாத சந்தர்ப்பத்திலும் தண்ணீரை உபயோகிக்க முடியாத சந்தர்ப்பத்திலும் தயம்மும் செய்து கொள்ளலாம் என்ற அனுமதி அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் சம்பந்தமாக ஏற்பட்ட ஒரு சம்பவத்தின் போது வந்தது. இதனை உம்மத்துகளுக்கு ஏற்பட்ட ஒரு பெரும் உதவி என்று ஸஹாபிகள் கருதினர். இதனைக் குறித்து உஸ்யதுப்னு குளைர் அல் அன்ஸாரி (ரலி) கூறியிருப்பது வருமாறு:

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் தங்கள் சகோதரி அஸ்மா (ரலி) அவர்களின் மாலையை இரவல் வாங்கி அணிந்து கொண்டு பிரயாணம் செய்தார்கள். வழியில் அது எங்கேயோ தவறிவிட்டது. அதனைத் தேடி எடுத்து வருவதற்காக சில ஸஹாபிகளை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனுப்பினார்கள். அவர்களுக்கு தொழுகைக்கான நேரம் வந்துவிட்டது. அவர்களுக்கு தண்ணீர் கிடைக்கவில்லை. எனவே, உளூ இல்லாமலேயே தொழுதார்கள்.

அவர்கள் திரும்ப வந்தபோது உளூச் செய்யாமல் தொழுத விபரத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் தெரிவித்தனர். அச்சமயத்தில் தயம்மமுடைய வசனம் அருளப்பட்டது. அப்பொழுது அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களை நோக்கி உஸ்யதுப்னு குளைர் (ரலி),

"உங்களுக்கு ஏதாவது ஒரு காரியம் ஏற்பட்டால், உங்களுக்கு அதிலிருந்து ஒரு விமோசனத்தையும்,





பொருளடக்கம்

முஸ்லிம்களுக்கு பரக்கத்தையும் அல்லாஹ் ஏற்படுத்தாமல் இருப்பதில்லை'' என்று கூறி தம்முடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்.

*குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் 1512ல் காண்க.*

ஒரு பிரயாணத்தின் போது அன்னையர்களான ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) ஹப்ஸா (ரலி)யும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் சென்றனர். வழியில் இருவரும் தங்கள் ஒட்டகையை மாற்றிக் கொண்டனர். பர்தா முறையை அவர்கள் கடைப்பிடித்துக் கொண்டிருந்ததால், அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) பிரயாணம் செய்கிற ஒட்டகை என நினைத்து, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அதன் மீதேறி அம்பாரிக்குள் சென்றார்கள். அங்கு அன்னை ஹப்ஸா (ரலி) அவர்கள் இருந்தார்கள். அவர்களுடனேயே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிரயாணம் செய்தார்கள்.

அப்பிரயாணம் முடிந்து வழியில் ஓரிடத்தில் யாவரும் தங்கினர். அப்பொழுது அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் ஒட்டகையை விட்டு இறங்கி, புற்கள் அதிகம் உள்ள இடத்திற்கு சென்று, அவற்றிற்குள் தங்கள் கால்களை விட்டு "என்னுடைய ரப்பே, என்மீது ஒரு தேளை அல்லது பாம்பை ஏவி விடுவாயாக அது என்னைக் கடிக்கட்டும். அவர்களைக் குறித்து எதையும் கூற நான் சக்தி பெறவில்லை'' என்று கூறினார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட்டுப் பிரிந்திருக்க முடியாத அளவிற்கு அவர்கள்





பொருளடக்கம்

மீது அன்னை (ரலி) அவர்களுக்கு அன்பிருந்தது என்பதை அவர்களின் செய்கையும் பிரார்த் தனையும் அறிவிக்கின்றன.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1811ல் காண்க.

ஒரு முறை நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் செருப்பை செப்பனிட்டுக் கொண்டிருந்தார்கள். பக்கத்தில் திருகையில் மா அறைத்துக் கொண்டிருந்த அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள், நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களின் நெற்றியில் கொப்பளித்துக் கொண்டிருந்த வியர்வைத் துளியைப் பார்த்தார்கள். அதிலிருந்து பிரகாசம் தோன்றி மின்னிக் கொண்டிருந்தது.

இதனைப் பார்த்து அன்னை (ரலி) அவர்கள் ஆச்சரியத்துடன் பிரம்மித்தார்கள். அதே சமயத்தில் அன்னை (ரலி) அவர்களை, நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களும் பார்த்து விட்டார்கள். ஆயிஷாவே! ஏன் பிரம்மித்தாற்போல் இருக்கிறாய்? என்று வினவினார்கள். அதற்கவர், யா ரசூலல்லாஹ்! தங்களுடைய நெற்றியில் வியர்வைத் துளி உண்டாகிறது. அதனுள் பிரகாசம் தோன்றி மின்னுகிறது.

இச்சமயத்தில் அபூகபீர் ஹுத்ஸீ (பிரபலமான புலவர்) தங்களைப் பார்த்தால் அவர் கூறிய செய்யுள்களுக்கு தாங்கள் தான் சரியான இலக்கு என்பதை அவர் உணர்வார் என்றார்.

அவர் கூறிய செய்யுள்கள் யாவை என நபி





பொருளடக்கம்

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவியதற்கு,

ومبرئ من كل غبر حيضة وفساد مرضعة وداء معضل

وإذا نظرت إلى أسرة وجهه برقت كبرق العارض المتهلل

(அவர் பிரகாசம்) அமுதருந்தல் ஆகியவற்றிலுள்ள அசூயைகளை விட்டுப் பரிசுத்தமானவர். நோய்களை விட்டு நீங்கியவர். அவருடைய இலங்கும் முகத்தை நீ பார்த்தால், ஒளியுள்ளதும்; பிரகாசிப்பதுமான மேகம் இலங்கும் என்ற செய்யுள்களைக் கூறினார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் கரங்களில் வைத்திருந்த பொருளை அப்படியே கீழே போட்டுவிட்டு எழுந்து வந்து அன்னை (ரலி) அவர்களின் நெற்றியில் முத்தமிட்டு "என்னைப் பார்த்து நீ மகிழ்ந்தது உன் பேச்சில் எனக் கேற்பட்ட மகிழ்ச்சியைப் போல் இல்லை" என்று கூறினார்கள்.

இக்காலத்துப் பெண்களில் சிலர், தங்கள் கணவர்கள் கொடுக்கிற வாழ்க்கைப் பணம் போதவில்லை என்று கோர்ட்டில் வழக்காடுவதைக் கண்டும் கேட்டுமிருக்கிறோம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபியாக இருந்தார்கள். எனவே, இவ்வுலக இன்பங்களையோ ஆடம்பரங்களையோ பொருட்படுத்தவில்லை. தங்கள் நோக்கம் போலவே இவ்வுலகில் உம்மஹாத்துல் முஃமினீன்களும் வாழவேண்டும் என எதிர் பார்த்து அதற்குத் தக்கவாறே உணவு,





பொருளடக்கம்

உடை முதலியவற்றை அளித்துக் கொண்டிருந் தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் துணைவியர்கள் நபிமார்களல்லர். நபியவர்களுக்கு வாழ்க்கைத் துணைவியர்களான பின்னர் தான் தியாக வாழ்வில் ஈடுபட்டனர். அத்துடன் பெண் வர்க்கத்தினர். எனவே, ஏனைய பெண்களைப் போல் நல்லவிதமாக உண்டு உடுத்த வேண்டும் என்ற ஆசை ஆரம்பத்தில் அவர்களுக்கும் இருப்பது இயல்பு.

நபி (ஸல்) அவர்களின் துணைவியர்கள் தங்கள் வாழ்க்கைச் செலவு சம்பந்தமாகத் தொந்தரவு செய்ததையொட்டி ஒரு மாத காலம் வரை அவர்களை விட்டும் பிரிந்திருந்தார்கள். அக்காலத்தில்

يٰۤاَيُّهَا النَّبِيُّ قُلْ لِّاَزْوَاجِكَ اِنْ كُنْتُنَّ تُرِدْنَ الْحَيٰوةَ الدُّنْيَا وَزِيْنَتَهَا فَتَعَالَيْنَ اُمَتِّعْكُنَّ وَاُسَرِّحْكُنَّ سَرَاحًا جَمِيْلًا وَاِنْ كُنْتُنَّ تُرِدْنَ اللّٰهَ وَرَسُوْلَهٗ وَالدَّارَ الْاٰخِرَةَ فَاِنَّ اللّٰهَ اَعَدَّ لِلْمُحْسِنٰتِ مِنْكُنَّ اَجْرًا عَظِيْمًا

“நபியே, இவ்வுலக வாழ்வையும், அதன் அலங்காரத்தையும் நீங்கள் விரும்பு கிறவர்களாக இருப்பீர்களாயின், வாருங்கள் உங்களுக்கு உடையணிவித்து அழகான விடுதலையாக விடுதலையளிக்கிறேன். அல்லாஹ்வையும் அவனுடைய ரசூலையும் மறுமையையும் நாடுகிறவர்களாக நீங்கள் இருப்பின், நிச்சய





பொருளடக்கம்

மாக அல்லாஹ் உங்களிலுள்ள நல்லவர் களுக்கு மகத்தான நற்கூலியைச் சித்தம் செய்திருக்கிறான்'' அல்குர்ஆன் (33:28,29) என்று இறைவன் அருளிய கட்டளையை அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களிடம் தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முதலில் ஓதிக் காண்பித்தார்கள். இவ்விஷயத் தில் அவசரப்பட்டு பதிலளிக்காமல் அவர்களின் பெற்றோர் களிடமும் கலந்தாலோசனை செய்து கொள்ளுமாறு கட்டளையிட்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் துணைவியர்கள் விரும் பினால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் சேர்ந்து தியாக வாழ்வை அனுபவிக்க வேண்டும். அவர்கள் விரும்பினால் விவாகரத்துப் பெற்று விலகிக் கொள்ளலாம் என்பது இக்கட்டளையின் கருத்து.

இவ்வசனத்தைச் செவியுற்றவுடன் அன்னை(ரலி) அவர்கள் இவ்விஷயத்தில் பெற்றோர்களிடம் ஆலோசனை கேட்கவா? அல்லாஹ்வையும், அவனது ரசூலையும், மறுமையையும் தேர்ந் தெடுத்துக் கொண்டேன் என்று பதிலளித்தார்கள். அன்னை (ரலி) அவர்களுக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இடத்தில் எவ்வளவு அன்பும் பக்தியும் இருந்ததென்பதற்கு இப்பதில் தக்க சான்றாகும். அன்னை (ரலி) அவர்களின் பதிலைப் பின்பற்றி ஏனைய உம்மஹாத்துல் முஃமினீன்களும் இவ்வாறே பதிலளித்தனர். அதிலிருந்து அவர்களின் வாழ்க்கையின் இலட்சியம் முற்றிலும் மாறிவிட்டது. எனவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவுக்குப் பின்னர் அவர்கள் வாழ்ந்த காலத்திலும் கூட உலகப் பற்றற்ற வாழ்வில்

எவ்வித மாறுதலும் ஏற்பட வில்லை.

"ஒரே நாளில் எழுபதாயிரம் திர்ஹம்களை அன்னை (ரலி) அவர்கள் தர்மம் செய்ததை நான் பார்த்திருக்கிறேன். அன்று அவர்கள் ஒட்டுப் போட்ட சட்டையைத்தான் அணிந்திருந்தார்கள்" என்று உர்வத்துப்னு ஜுபைர் (ரலி) கூறியுள்ளார்.

மற்றொரு சந்தர்ப்பத்தில் அப்துல்லாஹிப்னு ஜுபைர் (ரலி) அவர்கள், அன்னை (ரலி) அவர்களுக்கு, ஒரு லட்சம் திர்ஹம்களை அனுப்பி வைத்தார். அதே தினத்தில், அத்தொகை முழுவதையும் தர்மம் செய்துவிட்டார்கள். அன்று அவர்கள் நோன்பு நோற்று இருந்தார்கள். மாலையில் நோன்பு துறக்க உலர்ந்த ரொட்டியைப் பணிப் பெண் வைத்துவிட்டு, குழம்புக்காக அந்தப் பணத்தில் ஏதாவது மீதம் வைத்திருந்தால், நான் குழம்பு தயார் செய்திருப்பேன் என்றாள். அதற்கு அன்னை (ரலி) அவர்கள், எனக்கு அந்த சிந்தனையே இல்லை; நீயாவது நினைவூட்டி இருக்கலா மல்லவா?" என்று பதிலளித்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் வாழ்ந்ததின் காரணமாக உம்ம ஹாத்துல் முஃமினீன்களின் காலடியில் உலகம் குவிந்தும் கூட, அவர்கள், அதனை ஏறெடுத்தும் பார்க்கவில்லை என்பதை இச்சம்பவங்கள் காட்டு கின்றன.

ஸஹாபிகளில் ஏழு பேர் மார்க்கச் சட்ட நிபுணர்கள் என்று பிரபலமடைந்திருந்தனர். அவர்களுக்கு "அல் புக்கஹாஉஸ் ஸப்ஆ" என்று பெயர். சுவர்க்கவாதி என்று நற்செய்தி





பொருளடக்கம்

சொல்லப்பட்ட பத்துப்பேரில் ஒருவரான ஜுபைருப்னு அவாம் (ரலி) அவர்களின் புதல்வர் உர்வா (ரலி) என்பவரும் அவர்களில் ஒருவர். அன்னை (ரலி) அவர்களின் சகோதரி அஸ்மா (ரலி) அவர்களின் புதல்வராகவும் அவர் இருந்ததால், தம்முடைய சிறிய தாயாரான அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பை அதிகம் பெற்றவர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் வாழ்ந்த கால வரலாற்றைப் பற்றி ஒரு சமயம் வினவிய போது,

"மகனே! ஒரு பிறை பிறக்கும்; எங்கள் வீடுகளில் நெருப்புப் போடமாட்டோம். மறுபிறை பிறந்துவிடும், அப்புறமும் பிறை பிறக்கும். இவ்விதமாக இரண்டு மூன்று மாதங்கள் கூட அடுப்பில் நெருப்பு மூட்டாமல் இருந்த விபரத்தைக் கூறினார். அவ்வாறாயின், நீங்கள் எப்படி வாழ்ந்து கொண்டிருந்தீர்கள்? என்று ஆச்சரியத்துடன் வினவுகிறார். அதற்கு அன்னை அவர்கள் ஸஹாபிகளால் அன்பளிப்பு அனுப்பி வைக்கப்படும் பால் போன்ற உணவுகளையும், பேரீத்தங்கனிகளையும் உண்டு வாழ்ந்ததாக அறிவித்த விபரம் மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1115ல் இடம் பெற்றுள்ளது.

இவ்விதமாக பற்றற்ற வாழ்க்கையிலிருந்த அன்னை (ரலி) அவர்கள், ஹராம் ஹலால் சம்பந்தமான மார்க்கக் கட்டளைகள், திருக்குர்ஆனின் கருத்துக்களை விவரித்தல், அரப் நாட்டு பண்டைய பாடல்கள், பரம்பரை பற்றிய அறிவு ஆகியவற்றில் சிறந்து விளங்கினார்கள். இக்கல்வியில் இவரைவிட





பொருளடக்கம்

திறமையானவரைத் தாம் பார்த்ததில்லை என்று மேற்கண்ட உர்வத்துப்னு ஜுபைர் (ரலி) அறிவித்துள்ளார்.

மார்க்கம் சம்பந்தமாக சிக்கலான பிரச்சினை எழுந்தால், அதனை ஸஹாபிகள் அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களிடம் வந்து கேட்டுத் தெரிந்து கொள்வது வழக்கம்.

உம்மஹாத்துல் முஃமினீன்களில் அன்னை கதீஜா (ரலி) அவர்கள் சிறந்தவர்களா? அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் சிறந்தவர்களா? என்ற விவாதம் முற்காலத்து அறிஞர்களிடத்தில் எழுந்தது. அன்னை கதீஜா (ரலி) அவர்கள் தான் சிறந்தவர்கள் என்று ஒரு சாராரும், அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள்தான் சிறந்தவர்கள் என்று மற்றொரு சாராரும், இவ்விஷயத்தில் மௌனமாக இருக்க வேண்டும் என இன்னொரு சாராரும் ஆக மூன்று கருத்துகள் கூறியிருக்கின்றனர். அன்னை கதீஜா (ரலி) அவர்கள் நபித்துவத்தின் ஆரம்ப காலத்தில் வாழ்ந்தார்கள். அக்காலத்தில் இஸ்லாத்திற்கு அவர்கள் செய்த உதவி, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஆறுதல ளிப்பதாக இருந்தது. அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் இஸ்லாத்தின் முன்னேற்றக் காலத்தில் வாழ்ந்தார்கள். அக்காலத்தில் அவர்கள் ஆற்றிய தொண்டுகள் இஸ்லாத்திற்கு பெரும் உதவியாக இருந்தன. எனவே, இருவரும் இருவகையில் சிறந்தவர்கள் என்று ஒரு பேரறிஞர் விளக்கம் கூறியுள்ளார்.





பொருளடக்கம்

## ரிவாயத்துகள்

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் இரண்டாயிரத்து இரு நூற்றுப்பத்து ஹதீஸ்களை ரிவாயத்துச் செய்திருக்கிறார்கள். இவற்றில் ஸஹீஹில் புகாரியில் மட்டும் ஐம்பத்து நான்கு, ஸஹீஹ் முஸ்லிமில் மட்டும் அறுபத்தேழு, புகாரி முஸ்லிம் ஆகிய இரண்டிலும் ஏகமனதாகக் கூறப்பட்டிருப்பவைகள் நூற்று எழுபத்து நான்கு இதர நூல்களில் ஆயிரத்து தொள்ளாயிரத்தி பதினைந்து.

ஹதீஸ்களை அதிகமாக அறிவித்தவர்களில் உமர் பாரூக் (ரலி), ஐநூற்று முப்பத்தேழு, அலீமுர்த்தஜா (ரலி) அவர்கள் ஐனூற்று எண்பத்தாறு, இப்னுமஸ்வூத் (ரலி) எண்ணூற்றுச் சொச்சம், ஜாபிருப்னு அப்தில்லாஹி (ரலி), அப்துல்லாஹிப்னு அப்பாஸ் (ரலி), ஆயிரத்து ஐனூறுக்குக் கொஞ்சம் அதிகம், இப்னு உமர் (ரலி), அனஸ் (ரலி) ஆகிய இருவரும் அன்னை (ரலி) அவர்களுக்குச் சமமாக ஹதீஸ்களை அறிவிப்புச் செய்திருக்கின்றனர்.

## இராணுவ சேவை

பத்ருப்போர் நடந்த காலத்தில் அன்னை (ரலி) அவர்களின் துப்பட்டிதான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கொடிக்கு உபயோகிக்கப்பட்டது. அவர்களின் துணியி னாலான கொடியின் கீழில் தான் வானவர்களும் கூட இராணுவ சேவையில் ஈடுபட்டனர். முஸ்லிம் களுக்கு முதலாவதும் இறுதியானதுமான முதல் வெற்றியை இறைவன் அளித்தான்.





பொருளடக்கம்

உஹதுப் போரின் போது, அன்னை (ரலி) அவர்கள் போர்க்களத்திற்கு வந்து, தோல் துருத்தியில் தண்ணீர் கொண்டு வந்து காய மடைந்து கிடந்த வீரர்களுக்கு தண்ணீர் கொடுத்துக் கொண்டிருந்தார்.

**ஜமல்போர்:** ஹிஜ்ரீ 36ம் வருடம் ஜமாதுல் ஆகிர் மாதத்தில் பஸராவில் ஹளரத் அலீ (ரலி) அவர்களுக்கு எதிராக நடைபெற்ற போரில் எதிர்க்கட்சியினர் அன்னை (ரலி) அவர்களைத் தங்கள் தலைவியாக ஆக்கி, ஒட்டகையின் மீது அமரச் செய்து போர்க்களத்தில் கொண்டு வந்து நிறுத்திவிட்டனர். இருதரப்பிலும் பல்லாயிரக் கணக்கானவர் பலியாயினர். இறுதியில் வெற்றி ஹளரத் அலீ (ரலி) அவர்களுக்குத்தான். போர் முடிந்த பின்னர் அன்னை (ரலி) அவர்களை அலீ (ரலி) அவர்கள் சந்தித்தார்கள். இருவரும் மனம்விட்டுப் பேசினர். இருவரும் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போரிட வந்தாலும் இருவரின் உள்ளங்களும் அந்தரங்கத்தில் நிறம்பி இருந்த தால், நியாயத்தைக் கண்டுபிடிப்பதில் தாமதமேற் படவில்லை. அன்னை (ரலி) அவர்கள் எதிர்க் கட்சியினரை விட்டு விலகி, திருமதீனா விற்குச் செல்லுகையில்'' எனக்கும் அலீக்கும் ஏற்பட்ட மனக்கசப்பு மாமியாருக்கும் மருமகனுக்கும் ஏற்படுகிற மனக்கசப்பு போன்றதுதான். போரிடா தீர்கள். தாய் என்ற முறையில் மூமின்களுக்குக் கட்டளையிடு கிறேன்'' என்று அறிக்கையிட்டார்கள். ஹளரத் அலீ (ரலி) அவர்கள் அன்னை (ரலி) அவர்கள் கூறுவதுதான் உண்மை என்று அங்கீ கரித்தார்.





பொருளடக்கம்

இந்தப் போர் ஆரம்பமான தினத்தன்று கூபாவின் ஜாமிஆ மஸ்ஜிதில் அம்மாருப்னு யாஸிர் (ரலி) பிரசங்கம் செய்கையில் ''இம்மையிலும் மறுமையிலும் அவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனைவி என்பதை நான் அறிவேன். என்றாலும், நீங்கள் கலீபாவைப் பின்பற்றுகிறீர்களா? அல்லது அன்னை (ரலி) அவர்களைப் பின்பற்றுகிறீர்களா என்பதை இறைவன் சோதிக்கிறான்'' என்று கூறியுள்ளார். எதிர்க்கட்சிக் காரர்களான ஹளரத் அலீ (ரலி) அவர்களோ, அம்மாருப்னு யாஸிர் (ரலி) அவர்களோ அன்னை (ரலி) அவர்களைக் குறித்து குறை ஏதும் கூறவில்லை என்பது மட்டுமல்ல, அவர்களின் கண்ணியத்தை உயர்த்தியே கூறியுள்ளனர்.

*மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட் தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1654ல் காண்க.*

## அன்னை (ரலி) அவர்களின் பெருமை

அன்னை (ரலி) அவர்கள் ஏகதார மனைவியாக இருக்கவில்லை. பல சக்களத்திகளுக்கிடையில் வாழ்ந்தவர். இவ்வுலகப் பெண்கள் எதையும் சகித்துக் கொள்ளும் ஆற்றலுள்ளவர்கள். ஆயினும், தனக்கு சக்களத்தி வருவதையும் அவளுடன் தன் கணவர் வாழ்வதையும் சகிக்கமாட்டார்கள். எனவே, பெண்களுக் கிடையில் சக்களத்தி போராட்டம் ஏற்பட்டால் அது முடிவுறாது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பதினோரு மனைவியராக இருந்தனர். அவர்களில் ஒன்பது பேர் ஏககாலத்தில் மனைவியராக வாழ்ந்து இருக்கின்





பொருளடக்கம்

றனர். இவர்கள் தங்கள் சக்களத்திகளுடன் எப்படி வாழ்ந்தார்கள் என்பதற்கு மற்றவர்களைப் பற்றி அவர்கள் கூறும், கருத்து நமது பெண் வர்க்கத்திற்கு முன்மாதிரியாக இருக்கிறது. அன்னை (ரலி) அவர்கள் கூறியுள்ள கருத்துகள் வருமாறு:

"ஒரு நாள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "தங்கள் மனைவியரிடத்தில், உங்களில் எவர் அதிக தர்மமுள்ளவராக இருக்கிறாரோ; அவர் என்னிடத்தில் விரைவாக வந்து சேருவார்" என்று கூறினார்கள். அதிலிருந்து அவர்கள் யாவரும் ஒருவரை ஒருவர் முந்திக் கொள்ள முனைந்தனர். இறுதியாக எங்களில் ஜைனபு (ரலி) அவர்கள் அதிக தர்மமுள்ளவர் என்பது வெளியாயிற்று. ஏனெனில், அவர் தன் கரத்தால் உழைத்து அதனை தர்மம் செய்து கொண்டிருந்தார்.

*மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 693 காண்க.*

சன்மார்க்க விஷயத்தில் ஜைனபுவைப் பார்க்கினும் நல்ல பெண்களை நான் பார்க்கவில்லை. அல்லாஹ்விற்கு மிகவும் தக்வா (பயபக்தி) உள்ளவர். பேச்சில் மிகவும் உண்மையாளி. உறவினர்களை மிகவும் ஆதரிப்பவர், ஈகையில் மிகச் சிறந்தவர்.

**அன்னை ஸபிய்யா (ரலி) அவர்களைப் பற்றி:** ஸபிய்யாவைப் போல் நேர்த்தியான உணவு சமைப்பவளை நான் பார்த்ததில்லை.

**அன்னை சௌதா (ரலி) அவர்களைப் பற்றி:** சௌதாவைப் பார்க்கினும் என்னிடத்தில், அதிக அஸ்தஸ்துள்ளவர் இல்லை. எனக்கு மிகவும்

பிரியமானவர். மேலும், அவரிடத்தில் துடிப்பு இருக்கிறது.

**அன்னை ஜுவைரிய்யா (ரலி) அவர்களைப் பற்றி:**

ஜுவைரிய்யா இடத்தில் இனிமையும் கவர்ச்சியும் இருந்தன. அவரைப் பார்ப்பவர் அவரிடத்தில் விழுந்துவிடுவர்.

மற்றவர்களைப் பற்றி அவர் கூறிய கருத்துக்கள் கிடைக்க வில்லை. இந்நால்வரையும் பற்றிய இவ்வுரைகளில் எதிலாவது சக்களத்தி என்பதைப் பற்றிய சூசகமான வார்த்தை கூட இல்லாமல் தோழிகளைப் பற்றிக் கூறுவதுபோல் கருத்துத் தெரிவித்திருப்பதும் கவனிக்கத்தக்கது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என் வீட்டில், என்னுடன் தங்கும் நாளில் என் நெஞ்சின் மீது சாய்ந்த வண்ணம் இவ்வுலகை விட்டு மறைந்தார்கள். அல்லாஹ் என் உமிழ் நீரையும், அவர்களுடைய உமிழ் நீரையும் (அந்தக் கடைசித் தருணத்தில்) ஒன்று சேர்த்தான். அப்துர் ரஹ்மான் மிஸ்வாக்கு (பற்குச்சியு)டன் வந்தார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பலஹீனமானார்கள். அதனை(ப் பார்த்து) நான் வாங்கி (என் பற்களால்) மிருதுவாக்கி அவர்களுக்கு பற்றுலக்கி வைத்தேன் என்று கூறியுள்ளார்கள்.

இதில் கூறப்பட்டுள்ள பெருமைகள் யாவும் அவர் ஒருவருக்கே கிடைத்தன.

## மணி மொழிகள்

சுவர்க்கத்துத் தலைவாசலைத் தட்டுங்கள், திறக்கப்படும் என்று கூறினார்கள். எவ்விதமாகத்





பொருளடக்கம்

தட்ட வேண்டும்? என்று வினவப்பட்டது. பசி, தாகத்தைச் சகித்துக் கொள்வதால் சுவர்க்கத்துத் தலைவாசலைத் தட்ட முடியும் என்று பதிலளித் தார்கள்.

என்னை நல்லவன் என்று எப்பொழுது நான் உணர்ந்து கொள்ள முடியும்? என்று ஒருவர் வினவினார். உன்னை நீ கெட்டவன் என்று எண்ணும் சமயத்தில் என்று பதிலளித்தார்கள். என்னை நான் கெட்டவன் என்று எப்பொழுது தெரிந்துகொள்ள முடியும் என்று மீண்டும் வினவினார். உன்னை நீ நல்லவன் என்று கருதும் பொழுது என்று பதிலளித்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மறையும் போது அவர்களுக்கு வயது பதினெட்டு. பின்னர் நாற்பத்தெட்டு வருடகாலம் வாழ்ந்து. உலகிற்கு ஷரீஅத்தை உபதேசித்து விட்டுச் சென்றார்கள்.

## உறவினர்கள்

**தந்தை அபூபக்கர் ஸித்தீக் (ரலி) முதல் கலீபா**

தாயார் உம்முரவ்மான் (ரலி) கினானிய்யா கோத்திரத்தைச் சேர்ந்தவர். ஹிஜ்ரீ 6ம் வருடம் ரமலான் மாதம் மறைந்தார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கப்ரினுள் இறங்கி, ‘‘நாயனே! உனக்காகவும், உன் ரசூலுக்காகவும் உம்முரவ்மான் அடைந்தது உனக்கு மறைந்ததல்ல’’ என்று பிரார்த்தித்துவிட்டு, ‘‘சுவர்க்கத்து ஹூருல் ஈனைப் பார்ப்பது ஒருவருக்கு சந்தோஷமாக இருக்குமாயின் அவர் உம்மு ரவ்மானைப் பார்க்கட்டும்’’ என்றார்கள்.





பொருளடக்கம்

அப்துர் ரஹ்மானிப்னு அபீபக்கர் (ரலி) உடன் பிறந்த சகோதரர். அரப் நாட்டு வீரர்களில் ஒருவராகக் கணிக்கப்பட்டவர். கலீபத்துர் ரசூல் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் காலத்தில் யமாமாவில் முஸைலமத்துல் கத்தாபால் ஏற்பட்ட போரில் முஸ்லிம்களுக்குக் கிடைத்த வெற்றிக்கு இவருடைய போராட்டமும் முக்கிய புறக் காரணம் என்று கூறவேண்டும்.

இமாம் ஹுஸைன் (ரலி) அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரலி) உள்பட ஸஹாபிகளின் முன்னிலையில் அமீர் முஆவியா (ரலி), தம்மைந்தர் யஜீதைப் பட்டத்து இளவரசராக்கு வதைப் பற்றி கூறியபோது அப்துர் ரஹ்மான் இப்னு அபீபக்கர்(ரலி)ஆகிய இவர் தான், அவர் கருத்தை எதிர்த்து, ''ஹிர்க்கலித்துமா? ஒரு கிஸ்ரா மறைந்துவிட்டால் அவருடைய ஸ்தானத்தில் இன்னொரு கிஸ்ரா வருவாரா? அல்லாஹ்வின் மீது சத்தியமாக ஒரு போதும் இதனை நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோம்'' என்று துணிச்சலுடன் கூறினர்.

இவருடைய புதல்வரும் ஸஹாபிதான். இதன் மூலம் ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் குடும்பத்தில் அபூகுஹாபா (ரலி), அவர் புதல்வர் அபூபக்கர் ஸித்தீக் (ரலி), அவர் புதல்வர் அப்துர் ரஹ்மான் (ரலி), அவருடைய புதல்வர் ஆக நான்கு தலைமுறையினர் ஸஹாபிகளாவர். ஏககாலத்தில் நான்கு தலைமுறையினர் ஸஹாபிகளாக இருக்கும் பேறு வேறு எந்தக் குடும்பத்திற்கும் கிடைக்க வில்லை.





பொருளடக்கம்

இவரின் மறைவின் போது இவரது பிரிவாற்றா மையைக் குறித்து அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் கூறியதாவது:

كنا كندما في جذيمة حقبة من الدهر حتى قيل لن يتصدها

فلما تفرقتا كاني ومالكا لطول اجتماء لم بنت ليلة مع

முற்காலத்திலிருந்த அரப் நாட்டு பிரபல மன்னரான நுஃமானிப்னு முன்திர் என்பவர் ஒருவருக்கு மரண தண்டனை விதித்தார். அவருக்கு ஒருவர் ஜாமீன் கொடுத்து, தம் மனைவி மக்களைப் பார்த்துவர சில நாட்களுக்கு விடுதலை வாங்கிக் கொடுத்தார். அவர் தம் குடும்பத்தாரிடம் சென்று குறிப்பிட்ட நேரத்தில் வந்து சேரவில்லை. எனவே, ஜாமீன் கொடுத்தவரைப் பிடித்து மரண தண்டனையை நிறைவேற்றும்படி கட்டளை யிடப்பட்டது. ஜாமீன் கொடுத்தவர் இதற்கிணங்கி சரணடைந்தார். அவருடைய முகத்தை மூடி கொலைக்களத்திற்கு அழைத்துச் சென்ற சந்தர்ப்பத்தில் தற்செயலாக தண்டிக்கப்பட்டவர் நடுங்கிக் கொண்டே அவசரமாக ஓடிவந்து சேர்ந்தார். இதனைப் பார்த்த மன்னர் மரணதண்டனையை ரத்துச் செய்து. அவ்விருவரையும் தனது ஆலோசகர்களாக நியமித்தார். அவ்விருவரும் இணைபிரியா தோழர்க ளாயினர். ஒருவர் உயிரை மற்றவர் காத்ததாக அவ்விருவரும் கருதினர்.

இவ்வுதாரணத்தை அன்னை (ரலி) அவர்கள் குறிப்பிட்டு நுஃமானின் ஆலோசகர்கள் இணை பிரியவே மாட்டார்கள் என்று சொல்லப் படும் விதமாக ஒற்றுமையாக இருந்தது போல நாங்கள் இருந்தோம். நாங்கள் பிரிந்தபோது ஒரு இரவுகூட





பொருளடக்கம்

நாங்கள் ஒன்று சேராதிருந்தது போலத் தோன்று கிறது என்ற கருத்துள்ள செய்யுள்களைக் கூறினார்கள்.

**நுமைப்னு ஸன்ஜரா (ரலி):** இவர் மாற்றாந் தந்தையின் புதல்வர். அதாவது அவருடைய தாயார் உம்மு ரவ்மான் (ரலி) தம்முடைய முதல் கணவருக்குப் பெற்ற சகோதரர்.

**அப்துல்லாஹ் இப்னு புளாலா (ரலி):** அன்னை (ரலி) அவர்களுக்கு அமுதூட்டி வளர்த்த பெண்ணின் கணவர். பால் குடித்தந்தை. அவரும் அவருடைய தந்தையான புளாலாவும் ஸஹாபிகள். அப்துல்லாஹ் இப்னு புளாலா (ரலி) பஸராவின் காஜி (நீதிபதி)யாக இருந்தார். அவருக்கு அபூ ஆயிஷா என்ற காரணப்பெயருமுண்டு.

**அஸ்மா பின்து அபூபக்கர் (ரலி):** இவர் அன்னை ஆயிஷா ஸித்தீக்காவிற்கு மாற்றாந் தாயின் புதல்வி. அதாவது உம்மு ரவ்மானின் சக்களத்தி மகளாகிய சகோதரி. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களும் ஹிஜ்ரத்துச் செய்தபோது, அவ்விருவருக்கும் உணவு தயார் செய்து தன் இடுப்பிலிருந்த அண்ணாக்கயிற்றை எடுத்துக் கட்டிக் கொடுத்து அனுப்பினார். பின்னர் வேறொரு கயிற்றை தன் இடுப்பில் கட்டிக் கொண்டார். எனவே, இவருக்கு ஸாஹிபுன்னிதாக்கைனி என்ற காரணப் பெயர் வந்தது. இவர் ஆரம்ப காலத்திலேயே பதினெட்டாவது முஸ்லிமாக இஸ்லாத்தை தழுவியவர். கிட்டத்தட்ட நூறு வயது வரையில் வாழ்ந்து ஹிஜ்ரி 73ம் வருடம் ஜமாதுல் அவ்வல் மாதம் காலமானார். சுவர்க்கவாதி என்று நபி





பொருளடக்கம்

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் நற்செய்தி சொல்லப்பட்டவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மாமியான ஸபிய்யா பின்து - அப்தில் முத்தலிப் (ரலி) அவர்களின் புதல்வருமான ஜுபைருப்னு அவாம்(ரலி) என்பவரை இவர் மணந்திருந்தார். அவ்விரு வருக்கும் பிறந்தவர்கள் தான் அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரலி), உர்வத் இப்னு ஜுபைர் (ரலி) ஆகிய இருவரும்.

*மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1242 காண்க.*

**முஹம்மது இப்னு அபூபக்கர் (ரலி):**

இவர் மாற்றாந்தாயின் புதல்வரான சகோதரர். ஹளரத் அலீ (ரலி) அவர்கள் காலத்தில் அவர் எகிப்தில் (கவர்னராக) அதிபதியாகப் பணியாற்றி னார்.

**பரீரா (ரலி):** இவர் அன்னை (ரலி) அவர்களால் விலைக்கு வாங்கப்பட்டு விடுதலை செய்யப் பட்டவர். அப்துல் மலிக்கிப்னு மர்வான் (ரஹ்) கலீபா பதவியை ஏற்றுக்கொள்வதற்கு முன்னர் திருமதீனாவில் பரீரா (ரலி) இடம் அடிக்கடி வருவதுண்டு. அப்பொழுது அவரை நோக்கி "அப்துல் மலிக்கே! உன்னிடத்தில் சில நல்ல தன்மைகளை பார்க்கிறேன். அவை அரசாளு வதற்குத் தகுதியுள்ளவைகள் என்று தோன்றுகின் றன. உனக்கு அரசாங்கம் கிடைத்தால் இரத்தம் சிந்துவதைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் மனிதன் சுவர்க்கத்தைக் கண்ணால் பார்க்கும் அளவிற்கு நெருங்கிவந்துவிடுவான்.





பொருளடக்கம்

நியாயமின்றி முஸ்லிமுடைய இரத்தத்தைச் சிந்திய காரணத்தால் அவன் அதனுள் பிரவேசிக்க முடியாமல் தடுக்கப்பட்டுவிடுவான்'' என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூற நான் செவியுற்று இருக்கிறேன் என்று கூறுவது வழக்கம் என அப்துல் மலிக்கிப்னு மர்வான்(ரஹ்) என்பவரே கூறியுள்ளார். அவர் எதிர்பார்த்தது போல அவர் கலீபா பதவியை அடைந்து இஸ்லாமிய அரசாங்கத்தின் அதிபதியானார்.

மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1113 காண்க.

## சன்மார்க்க சேவையைப் பாராட்டுதல்

ஹளரத் உதுமான் (ரலி) அவர்களை ஷஹீதாக்கியவர் என்று பனூ உமய்யாக்களால் குற்றம் சாட்டப்பட்டவர் முஹம்மது இப்னு அபூபக்கர் (ரலி). இந்த எண்ணத்தை மனதில் வைத்து அவரை முஆவியத்துப்னு குதைஜ் (ரஹ்) கொன்றுவிட்டார். அவர் அன்னை (ரலி) அவர்களின் சகோதரர். எனவே, அவரைக் கொன்ற முஆவியா இப்னு குதைஜ் (ரஹ்) மீது அன்னை (ரலி) அவர்களுக்குக் கோபமும் வருத்தமுமிருந்தது.

முஆவியத்துப்னு குதைஜ் (ரஹ்) முஸ்லிம் படைகளுக்குத் தளபதியாக இருந்து ஆப்பிரிக்கா வில் புரட்சிக்காரர்களை எதிர்த்துப் போராடி வெற்றிமேல் வெற்றி பெற்று கீர்த்தி பெற்றுக் கொண்டிருந்தார். அவரிடம் ராணுவசேவை செய்த அப்துர் ரஹ்மானிப்னு ஹுமாஸ்தல் மஹ்ரீ என்பவர்





பொருளடக்கம்

ராணுவ சேவையிலிருந்து ஓய்வு பெற்ற பின்னர் திருமதீனாவில் அன்னை (ரலி) அவர்களை தரிசிக்க வந்தபோது, அவரை நோக்கி, என் மனப் போக்கை கவனியாதீர்கள். ஆப்பிரிக்காவில் உங்கள் படைத்தலைவரின் நிலை எப்படி இருந்தது என்பதை எனக்குக் கூறுங்கள் என்று கேட்டுக் கொண்டார்.

அதற்கவர் போர்க்களத்தில் ஒட்டகை செத்து விட்டால், உடனே வேறு ஒரு ஒட்டகை வந்து சேர்ந்துவிடும். குதிரை செத்துவிட்டால் வேறு ஒரு குதிரை அந்த நிமிடத்திலேயே கிடைத்து விடும். பணியாளர் ஓடி மறைந்து விட்டால் அவனுக்கு பதிலாக வேறொரு பணியாளர் நியமிக்கப்பட்டு விடுவார்'' என்று கூறினார்.

இதனைக் கேட்டவுடன் அன்னை (ரலி) அவர்கள் ''அஸ்தஃபிருல்லாஹ். (அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்கிறேன்) நாயனே, என் சகோதரரை அவர் கொன்றுவிட்டார் என்பதற்காக அவர் மீது நான் கோபமடைந்திருப்பேனாயின் என்னை மன்னிப் பாயாக. நாயனே, என் உம்மத்துக்கு கருணை காட்டுவோருக்கு நீ கருணை காட்டுவாயாக. அவர்களைக் கொடுமைப்படுத்துவோரைக் கொடு மைக்கு உட்படுத்துவாயாக'' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறச் செவியுற்றி ருக்கிறேன் என்று பிரார்த்தித்தார்கள்.

அன்னை (ரலி) அவர்களுடன் சேர்ந்து உம்மு ஹக்கீம் பின்து காலிதும் உம்மு ஹக்கீம் பின்து அப்தில்லாஹ்வும் திரு கஅபாவை தவாபு செய்து கொண்டிருந்தனர். அங்கு ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலி) என்பவரைப் பற்றிய பேச்சு வந்தது. அவ்விரு

பெண்களும் அவரை ஏசினர். அப்பொழுது அன்னை (ரலி) அவர்கள் அவ்விரு பெண்களையும் நோக்கி "நீங்கள் அவரை ஏசுகிறீர்களா? அவரை அல்லாஹ் சுவர்க்கத்தில் பிரவேசிக்கச் செய்வான் என்று நான் நம்புகிறேன்."

هجوت محمدا واجبت عنه فإن أبي ووالدتي وعرضي

وعند الله في ذاك الجزاء لنعرض محمد منكم وقاء

முஹம்மதை நீ நிந்தித்தாய். அவர் சார்பாக நான் பதிலளித்தேன். அதற்காக அல்லாஹ்விடத்தில் நற்பயன் இருக்கிறது. என்னுடைய தந்தையும் என் தாயும் என் . மரியாதையும் முஹம்மதுடைய மரியாதைக்கு உங்களை விட்டுக் காப்பதாக இருக்கின்றன என்று அவர் பாடியிருப்பதை நீங்கள் பார்க்கவில்லையா?" என்றார்கள்.

அவர் தங்களைப் பற்றி ஒன்றைச் சொன்னார் என்பதற்காகத் தானே நாங்கள் அவரை ஏசினோம் என்றனர். அதற்கு அன்னை (ரலி) அவர்கள் அது ஒன்றுமில்லை. அதனைப் பொருட்படுத்தாதீர்கள் என்று பதிலளித்தார்.

ஹஸ்ஸான் (ரலி) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஆஸ்தான கவிஞர்களில் ஒருவர். அவருக்கு மஸ்ஜிதுந் நபவிய்யில் மேடை அமைத்து அதன் மீதிருந்து சன்மார்க்க விரோதிகளின் நிந்தனைப் பாடல்களுக்கு பதிலளிக்கும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிடுவார்கள். அவர் எதிரிகளுக்குத் தக்க பதில் செய்யுள்களைக் கூறுவார். அவர் பரிசுத்த ஆவியால் (ஹளரத்





பொருளடக்கம்

ஜிப்ரயீல் (அலை) அவர்களால்) உதவி செய்யப்படுபவர். இவ்வாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கிறார்கள் என்று ஹதீஸ்களில் கூறப்பட்டிருக்கிறது.

அன்னை (ரலி) அவர்களை அவதூறு செய்தவர்களுடன் சேர்ந்து அவரும் அவதூறு செய்ததற்காக தண்டிக்கப்பட்டதாகவும் ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால், அன்னை (ரலி) அவர்களைப் புகழ்ந்து அவர் இயற்றிய பாடலில்,

فإن كان ما قد قيل عني قلته

فلا رفعت سوطي إلى أنا ملي

நான் கூறியதாக என்னைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அது உண்மையாக இருக்குமாயின் என் விரல் நுனிகளின் பால் என் சாட்டை உயராமல் போகட்டும். அதாவது என் கைகள் சோகையாகப் போகட்டும்'' என்று பாடி அதில் தாம் சேரவில்லை என்று மறுத்துக் கூறியதும் ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது. எனவே, அதை பெரிதுபடுத்திக் கூறிக் கொண்டிருக்க வேண்டியதில்லை. இதனைத்தான் அன்னை (ரலி) அவர்கள் அது ஒன்றுமில்லை. அதனைக் கவனியாதீர்கள் என்று கூறியுள் ளார்கள்.

ஹிஜ்ரீ 57ம் வருடம் ரமலான் மாதம் 17ம் தேதி அன்னை (ரலி) அவர்கள் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப் பட்டார்கள். அப்பொழுது அவருக்கு வயது அறுபத்தாறு.





பொருளடக்கம்

அன்னை (ரலி) அவர்களின் கட்டளைப்படி இரவில் அடக்கம் செய்யப் பட்டார்கள். அவருடைய சகோதரர்களின் புதல்வர்கள் காஸிமுப்னு முஹம்மத் (ரலி), அப்துல்லாஹ் இப்னு அப்திர்ரஹ்மான் (ரலி), அப்துல்லாஹிப்னு அபீஅத்தீக் (ரலி), சகோதரியின் புதல்வர்கள் உர்வத்துப்னு ஜுபைர் (ரலி), அப்துல்லாஹிப்னு ஜுபைர் (ரலி) ஆகியவர்கள் கப்ரில் இறங்கி சடலத்தை வைத்தனர்.

மர்வானுப்னு ஹக்கம் திருமக்காவிற்கு அலுவலாகச் சென்றிருந்தார். அப்பொழுது அவர் சார்பாக திருமதீனாவில் ஹளரத் அபூஹுரைரா(ரலி) தற்காலிக (கவர்னராக) அதிபதியாக பணியாற்றிக் கொண்டிருந்தார். எனவே, அவர் ஜனாஸா தொழுகையை நிறைவேற்றி வைத்தார்.

ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களின் வம்சத்தினருக்கு ஸித்தீக் என்று பெயர். இந்தியாவில் ஏராளமாக இருக்கின்றனர். பிரபல மீரட் மௌலானா அப்துல் அலீம் ஸித்தீக்கி (ரஹ்) தமிழ் நாட்டில் பள்ளபட்டி மஷாயிக் அல்ஹாஜ் மௌலானா மௌலவி ஷாஹ் அப்துல் மஜீத் சாகிப் காதிரி தங்கள் சாகிப் (ரஹ்) முதலியவர்கள் இவ்வம்சத்தினர். லால்பேட்டை, புதுக் கோட்டையைச் சேர்ந்த அன்னவாசல், கீழக்கரை முதலிய இடங்களிலும் இவ்வம்சத்தினர் காணப்படுகின்றனர்.



பொருளடக்கம்

# (4) அன்னை ஹப்ஸா (ரலி)

ஹளரத் உமர் பாருக் (ரலி) அவர்களின் புதல்வியாகிய இவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மணந்து கொள்வதற்கு முன்னர் குனைஸுப்னு தாபத்தப்னி கைஸிப்னி அதிய்யிஸ் ஸலமீ (ரலி) என்பவரின் வாழ்க்கைத் துணைவியாக இருந்தார்.

இவருடைய கணவர் குனைஸ் (ரலி) ஆரம்பகால முஸ்லிம்களில் ஒருவர். அபிசீனியாவிற்கு ஹிஜ்ரத்துச் செய்து மீண்டும் மதீனாவிற்கு ஹிஜ்ரத்துச் செய்தார். பத்ரு, உஹதுப் போர்களில் ஏற்பட்ட காயத்தால் காலமானார். இதுதான் பிரபலமான சொல். எனினும், அவர் பத்ருப் போருக்குப் பின்னர் காலமானதாகவும் சொல்லப் பட்டிருக்கிறது.

தமது செல்வி விதவையாகிவிட்டதைக் குறித்து ஹளரத் உமர் பாருக் (ரலி) அவர்களுக்குக் கவலை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் செல்வி ஸித்தி ருக்கையா (ரலி) காலமானதால் ஹளரத் உதுமான் (ரலி) அவர்கள் மனைவியை இழந்திருந்தார். எனவே, ஒருநாள் அவர் கவலையுடன் அமர்ந்து இருந்ததைப் பார்த்ததும் அவரிடத்தில் அவர் விரும்பினால் தம்முடைய புதல்வி ஹப்ஸா (ரலி)யை திருமணம் செய்து வைப்பதாகத் தெரிவித்துக் கொண்டார். தற்போது திருமணம் செய்யும் எண்ணம் இல்லை என அவர் பதில் அளித்தார்.

பின்னர், ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி)





பொருளடக்கம்

அவர்களைச் சந்தித்து தமது புதல்வியை திருமணம் செய்து தருவதாகக் தெரிவித்தார். அதற்கவர் பதில் கூறவில்லை. இந்த ஏமாற்றத்தைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஹளரத் உமர் பாரூக் (ரலி) கூறி முறையிட்டார். அப்பொழுதவர்கள் உதுமானைப் பார்க்கினும் சிறந்தவர் ஹப்ஸாவை திருமணம் செய்வார். ஹப்ஸாவைப் பார்க்கினும் சிறந்த பெண்ணை உதுமான் திருமணம் செய்வார்'' என்று கூறி அவரைத் தேற்றினார்கள்.

சில நாட்களுக்குப் பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் செல்வி உம்மு குல்தூம் (ரலி) அவர்களை உதுமான் (ரலி) அவர்களுக்கு திருமணம் செய்து வைத்துவிட்டு, ஹப்ஸா (ரலி) அவர்களைத் தாங்களே திருமணம் செய்து கொண்டார்கள். இத்திருமணம் நடை பெற்ற பின்னர், உமர் பாரூக் (ரலி) அவர்களை அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் சந்தித்து தங்கள் செல்வியைக் குறித்து என்னிடம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தெரிவித்திருந் தார்கள். எனவே தான் நான் மௌனமாக இருந்தேன். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய இந்த ரகசியத்தை அவர்களாக வெளியி டுவதற்கு முன்னர் நான் வெளியிடுவதற்கில்லை. எனவே தான் நான் மௌனமாக இருந்தேன். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்து கொள்ளவில்லையானால், நான் செய்திருப்பேன். எனவே, நான் மௌனமாக இருந்ததைப் பற்றி எதுவும் நினைக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார்கள். இதைப் பற்றி விரிவான விபரங்களை மௌலானா அவர்களால்

மொழி பெயர்க்கப் பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1565 காண்க.

அன்னை ஹப்ஸா (ரலி) அவர்களைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "அவர் மிகவும் வணங்குபவர் மிகவும் நோன்பு நோற்பவர். சுவர்க்கத்தில் தங்கள் மனைவி" என்று கூறியதாக **அல்இஸ்திஆப்** என்ற கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.

அன்னை (ரலி) அவர்கள் ஹளரத் உமர் பாரூக் (ரலி) அவர்களின் புதல்வியாவார். எனவே, அவரிடம் துணிகரமும் பேச்சில் துடிப்புமிருந்தன. இதனைக் குறித்து உமர் (ரலி) அவர்கள்,

"இஸ்லாத்திற்கு முன்னர் நாங்கள் பெண்களை ஒரு பொருட்டாக மதிப்பதில்லை. ஒருநாள் ஒரு காரியத்தைக் குறித்து நான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். என் மனைவி எனக்கு யோசனை கூறினாள். இந்த விஷயங்களில் உங்களுக்கு என்ன சம்பந்தம்? என்று கண்டித்தேன். என் பேச்சு உங்களுக்குப் பிடிக்கவில்லை. ஆனால், உங்களுடைய புதல்வி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சரியாகப் பதில் கூறிக்கொண்டிருக்கிறார்" என்றார். உடனே எழுந்து ஹப்ஸாவிடம் சென்றேன். "மகளே, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நீங்கள் பதில் கூறுகிறீர்களா? அதனால், பகல் முழுவதும் அவர்கள் கவலையாக இருக்கிறார்களாமே?" என்று வினவினேன். "ஆம்; உண்மைதான்" என்று பதிலளித்தார். உடனே, நான் "ஜாக்கிரதை, அல்லாஹ்வின் வேதனையைக் குறித்து





பொருளடக்கம்

அஞ்சுகிறேன்'' என்று நான் கூறினேன் என்று தெரிவித்திருக்கிறார்.

*மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1672 காண்க.*

ஒரு முறை அன்னை ஸபிய்யா (ரலி) அழுது கொண்டிருந்தார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வந்தார்கள். அழுவதற்குக் காரணம் என்னவென்று வினவினார்கள், ''நீ யூதனின் புதல்வி என்று ஹப்ஸா சொல்கிறார்'' என்றார். அப்பொழுது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''நீ நபியின் புதல்வி. உன்னுடைய சிறிய தந்தை நபி. நபியின் மனைவியாய் இருக்கிறாய். ஹப்ஸா உன்னைப் பார்க்கினும் எந்த விஷயத்தில் பெருமை கொள்ள முடியும்'' என்று சமாதானம் கூறினார்கள்.

உன்னைப் பார்க்கினும் நாங்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் அதிக கௌரவம் வாய்ந்தவர்கள். நாங்கள் அவர்களின் மனைவியர்களாகவும் அவர்களின் சிறியதந்தையரின் புதல்வியாகவும் உள்ளோம் என்று அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்களும் அன்னை ஹப்ஸா (ரலி) அவர்களும் கூறினார்கள்.

இது அன்னை ஸபிய்யா (ரலி) அவர்களுக்கு அதிருப்தியாக இருந்தது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் இது குறித்து முறையிட்டார். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னைப் பார்க்கினும் நீங்கள் எவ்வாறு கௌரவம்





பொருளடக்கம்

உள்ளவர்களாக இருக்க முடியும்? என் கணவர் முஹம்மது. என் தந்தை ஹாரூன், என் சிறிய தந்தை மூஸா'' என்று ஏன் நீ சொல்லவில்லை என்று வினவினார்கள்.

அன்னை ஆயிஷா (ரலி), அன்னை ஹப்ஸா (ரலி) ஆகிய இருவரும் ஹளரத் அபூபக்கர் (ரலி), உமர் (ரலி) ஆகியவர்களின் புதல்விகள். அவ்விருவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் மிகவும் நெருங்கிய வர்கள். எனவே, ஏனைய உம்மஹாத்துல் முஃமினீன்களை விட அவ்விருவரும் தோழிகளாக இருந்தனர்.

அன்னை ஹப்ஸா (ரலி) அவர்கள் கண்டிப் பானவர்கள். எனவே, ஹளரத் அபூபக்கர் ஸித்தீக்(ரலி) அவர்கள் திருக்குர்ஆனை ஒன்று சேர்த்து ஒரு பிரதியாக ஆக்கியபோது, அதனை அன்னை ஹப்ஸா (ரலி) அவர்களிடம் தான் கொடுத்து வைத்தார்கள். பின்னர் ஹளரத் உதுமான் (ரலி) அவர்கள் காலத்தில் அப்பிரதியை ஆறு பிரதிகளாக்கி இஸ்லாமிய நாட்டின் முக்கியப் பகுதிகளுக்கு அனுப்பி வைத்தார்கள். விரிவான விபரம் அறிய மௌலானா அவர்களால் எழுதப்பட்ட ''திருக்குர்ஆன் தொகுக்கப்பட்ட வரலாறு'' எனும் நூலை காண்க.

## மறைவு

அன்னை (ரலி) அவர்கள் ஹிஜ்ரி நாற்பத்தைந் தாம் ஆண்டு ஹளரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப் பட்டார்கள். மறைவிற்கு முன்னர் தம் சகோதரர்





பொருளடக்கம்

அப்துல்லாஹிப்னு உமர் (ரலி) அவர்களை அழைத்து தமது தந்தை தமக்காகச் செய்த வஸிய்யத்தைப் புதுப்பித்து, தமக்கிருந்த சில சொத்துக்களை வக்ஃபு செய்தார். சிலவற்றை தர்மம் செய்தார். அக்காலத்தில் திருமதீனாவில் மர்வானுப்னு ஹக்கம் அதிபதியாக இருந்தார். எனவே, அவர் ஜனாஸா தொழுகையை நிறைவேற்றி வைத்தார். பனூ ஹஜ்ம் வீட்டிலிருந்து முஙய்யரத் இப்னு ஷுஃபா (ரலி) வீடு வரை ஜனாஸா பேழையை மற்றவர்களுடன் சேர்ந்து அவரும் அதனைத் தூக்கிக் கொண்டு வந்தார். அங்கிருந்து கப்ரு வரையில் ஹளரத் அபூஹுரைரா (ரலி) அதனைச் சுமந்தார். அப்துல்லாஹ், ஆஸிம், ஸாலிம், அப்துல்லாஹ் ஹம்ஜா (ரலி) ஆகியவர்கள் சடலத்தை கப்ரில் இறக்கி வைத்தனர். கடைசியிலுள்ள இருவரும் அப்துல்லாஹிப்னு உமர் (ரலி) அவர்களின் புதல்வர்கள்.

## பிறப்பு

அன்னை (ரலி) அவர்களின் தாயார் பெயர் ஜைனபு பின்து மள்ஊன் (ரலி)யாகும். ஆரம்பகால முஸ்லிம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நபித்துவம் வருவதற்கு ஐந்து வருடங்களுக்கு முன்னர் பிறந்தார். அப்பொழுது குறைஷியர் திருகஅபாவை புதுப்பித்துக் கட்டிக் கொண்டிருந்தனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மணக்கும் பொழுது அவருக்கு வயது இருபத்திரண்டு.

## ரிவாயத்துகள்

புகாரி, முஸ்லிம் ஆகிய இரு நூல்களிலும்





பொருளடக்கம்

ஐக்கியமாகக் கூறப்பட்டிருப்பவை நான்கு. முஸ்லிமில் மட்டும் கூறப்பட்டு இருப்பவை ஆறு. இதர ஹதீஸ் கிரந்தங்களில் கூறப்பட்டு இருப்பவை ஐம்பது. ஆக மொத்தம் அறுபது ஹதீஸ்கள் அன்னை(ரலி) அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ளன.

## உறவினர்கள்

**தந்தை ஹளரத் உமர் பாரூக் (ரலி) இரண்டாவது கலீபா**

சகோதரர்கள் அப்துல்லாஹிப்னு உமர் (ரலி). இவர் ஹிஜ்ரீ எழுபத்து மூன்றாம் வருடத்தில் திருமக்காவின் அருகில் இறந்தார்கள். திருமக்கா விலிருந்து தன்ஈம் (மஸ்ஜிது ஆயிஷா) செல்லும் வழியில் ஷுஹதா என்ற இடத்திற்குப் பக்கத்தில் பாதைக்கு இடப்புறத்தில் அடக்கம் செய்யப்பட்டார். அக்காலத்தில் அந்த இடம் நகருக்கு வெளியில் இரண்டு அல்லது இரண்டரை மைல் தொலைவில் ஹரம் எல்லைக்குள் இருந்தது. இப்பொழுது அந்த இடம் வரையில் வீடுகள் கட்டப்பட்டு நகருடன் சேர்ந்து ஒரு பகுதியாகிவிட்டது. அவரின் மறைவின் போது ஹஜ்ஜாஜுப்னு யூஸுப் திருமக்காவின் அதிபதியாக (கவர்னராக) இருந்தார். அவருடைய வஸிய்யத்துப்படி அதிபதிக்கு தகவல் தெரிவிப்பதற்கு முன்னதாகவே ஜனாஸா அடக்கம் செய்யப்பட்டது. அவரால் 2210 ஹதீஸ்கள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன.

பிரபஞ்ச மாயையில் சிக்காதவர். கிலாபத் பதவியை ஏற்றுக்கொள்ளுமாறு முக்கியமானவர்களின் தூது கூட்டம் சென்று கேட்டுக் கொண்டும் கூட அதனை ஏற்க மறுத்த பெரியார்.





பொருளடக்கம்

தாயார் ஜைனபு பின்து மள்ஊன் (ரலி). ஆரம்பகால முஸ்லிம். ஹிஜ்ரத்திற்கு முன்னர் திருமக்காவில் மறைந்தார். இவ்வம்மையின் வம்சம் கஃபுப்னு லுவய்யி என்பவரில் வந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வம்சத்துடன் ஒன்று சேருகிறது. ஜைனபு (ரலி)யின் தாயாரின் வம்சமும் அதே போல் கஃபுப்னு லுவய்யில் வந்து சேருகிறது.

தாய்மாமன் உதுமான் இப்னு மள்வூன் (ரலி). இஸ்லாத்தைத் தழுவியர்களில் பதினான்காமவர். அபிசீனியா, திருமதீனா ஆகிய இரண்டு இடங்களுக்கும் ஹிஜ்ரத்துச் செய்தவர். முஹாஜிர் களில் திருமதீனாவில் யாவருக்கும் முதலாவதாக மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார். அவருக்கு கபன் செய்த பின்னர், அவருடைய நெற்றியை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முத்தமிட்டார்கள். இவருடைய கப்ரின் அருகில் தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புதல்வர் ஸெய்யிதுனா இப்ராஹீம் (ரலி) அடக்கம் செய்யப்பட்டார். தங்கள் புதல்வரை அடக்கம் செய்தபோது "எங்களி லிருந்து முந்திச் சென்ற நல்லோருடன் சேர்ந்துகொள்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். இன்றும் திருமதீனாவில் ஜியாரத் திற்குச் செல்வோர் இவரையும் ஜியாரத்துச் செய்கின்றனர்.

ஹளரத் உமர் பாரூக் (ரலி) அவர்களின் வம்சம் இந்தியாவில் ஏரா்ளமாகப் பெருகி இருக்கிறது. குத்புல் அக்தாப் காஜா பரீதுத்தீன் ஷக்கர்

கன்ஜ்(ரஹ்), இமாம் ரப்பானி முஜத்திது அல்பதானி ஷெய்கு அஹ்மது ஸர்ஹிந்தீ (ரஹ்), ஷாஹ் வலியுல்லாஹ் சாஹிப் திஹ்லவீ (ரஹ்) முதலியவர்கள் இவ்வம்சத்தினர்.

ஹிஜ்ரி 41ல் அன்னை (ரலி) மறைந்தார்கள் என்றும் ஒரு செய்தி இருக்கிறது. ஆப்பிரிக்காவை வென்ற வருடத்தில் மறைந்தார்கள் என்றும் ஒரு செய்தியுண்டு. இதனை ஆதாரமாக வைத்து ஹிஜ்ரி 27ல் மறைந்தார்கள் என்றும் கூறியுள்ளனர் சிலர். இது தவறான கருத்து. ஹிஜ்ரி 27ல் ஹளரத் உதுமான்(ரலி) அவர்கள் காலத்தில் முதன் முதலாக ஆப்பிரிக்கா வெல்லப்பட்டது. அங்கு புரட்சி ஏற்பட்டதால் 45ம் வருடத்தில் புரட்சியை ஒடுக்கி மீண்டும் கைப்பற்றப்பட்டது.





பொருளடக்கம்

## (5) அன்னை ஜைனபு பின்து குஜைமா (ரலி)

(இவர் ஏழைகளுக்கு அன்னதானம் அளித்துக் கொண்டு இருந்ததால், இஸ்லாத்திற்கு முன்னர் இவரை உம்முல் மஸாக்கீன் (ஏழைகளின் தாய்) என்று மக்கள் அழைத்துக் கொண்டிருந்தனர். இவருடைய இயற்பெயர் ஜைனபு. இவருடைய முதல் திருமணம் துபைல் என்பவருடனும், இரண்டாவது திருமணம் உபைதாவுடனும் நடந்தன. இவ்விருவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பெரிய தந்தை ஹாரிதுப்னு அப்தில் முத்தலிபின் புதல்வர்கள். மூன்றாவதாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மாமியின் புதல்வரும், அன்னை ஜைனபு பின்து ஜஹ்ஷ் (ரலி) அவர்களின் சகோதரருமான அப்துல்லாஹிப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்களுடன் நடந்தது. அவர் ஹிஜ்ரீ 3ம் வருடத்தில் நிகழ்ந்த உஹதுப்போரில் ஷஹீதாகி விட்டார். பின்னர் நான்காவதாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மணந்தார்கள். எனினும் திருமணம் நிகழ்ந்த இரண்டு மூன்று மாதங்களில் மறைந்துவிட்டார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஜனாஸா தொழுகையை நிறைவேற்றி வைத்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார். அன்னை மைமூனா (ரலி) அவர்களின் தாய் வயிற்றில் வேறொரு தந்தைக்குப் பிறந்த சகோதரி இவர். மறையும்போது இவருக்கு வயது முப்பது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்னிலையில் மறைந்த இரு உம்மஹாத்துல் முஃமினீன்களில் இவர் இரண்டாமவர்.)





பொருளடக்கம்

# (6) அன்னை உம்மு ஸலமா (ரலி)

இவருடைய இயற்பெயர் ஹிந்து. உம்மு ஸலமா என்பது காரணப் பெயர். தந்தையின் பெயர் ஸுஹைல். அபூ உமய்யா என்பது காரணப் பெயர். ஜாதுர் ராக்கிப் என்று பிரபல்யம் அடைந்தார். தாயின் பெயர் ஆத்திக்கா. அப்துல்லாஹிப்னு அப்தில் அஸத் என்பவருக்கு திருமணம் செய்து கொடுக்கப்பட்டார். கணவரும் மனைவியும் மக்ஜூம் கோத்திரத்தைச் சேர்ந்த குறைஷியர். இருவருக்கும் அப்துல்லாஹ் என்பவர் பூட்டனார்.

(உம்மு ஸலமா (ரலி) ஆரம்பகால முஸ்லிம். இவ்வாறே இவரின் கணவரான அப்துல்லா ஹிப்னு அப்தில் அஸத் (ரலி) என்பவரும் ஆரம்பகாலத்து முஸ்லிம். இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவியவர் களில் இவர் பதினோராவது நபர் என்று சொல்லப் படுகிறது. இவரின் தாயார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மாமியான பர்ரா என்பவர். தவிர, இவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், ஹளரத் ஹம்ஜா(ரலி) அவர்களும் ஒரே பெண்ணிடத்தில் பால் குடித்ததன் மூலம் பால்குடிச் சகோதரர்களும் ஆவர்.

மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட
*தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1790*
காண்க.

தன் கணவர் அப்துல்லாஹிப்னு அப்தில் அஸத்(ரலி) என்பவருடன் அபிசீனியாவிற்கு ஹிஜ்ரத்துச் செய்தார். அங்கு தான் இவ்விரு வருக்கும் ஸலமா என்ற குழந்தை பிறந்தது.

இக்குழந்தையின் காரணமாக இவ்விருவருக்கும் உம்மு ஸலமா அபூ ஸலமா என்ற காரணப் பெயர்கள் ஏற்பட்டன. அபிசீனியாவிலிருந்து மீண்டும் திருமக்கா வந்தனர். பின்னர் திருமதீனாவிற்கு ஹிஜ்ரத்துச் செய்தனர். திருமதீனாவிற்கு ஹிஜ்ரத்துச் செய்த முதல் பெண் என்றும் இவரை சிறப்பித்துக் கூறப்படுகிறது.

## ஹிஜ்ரத்தின் விளைவு

தம்பதிகள் இருவரும் தங்கள் குழந்தை களுடன் மதீனாவை நோக்கி ஹிஜ்ரத்துச் செய்தனர். அபூ ஸலமாவின் குடும்பத்தினர் வழிமறித்து, நீர் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். ஆனால், குழந்தைகள் எங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களை நீர் கொண்டு போகவிடமாட்டோம் என்று கூறி, குழந்தைகளைப் பறித்துக் கொண்டனர். இதுபோல உம்மு ஸலமாவின் குடும்பத்தினர் வந்து, உமது மனைவி எங்கள் குடும்பத்துப் பெண். அவரை நாங்கள் விடமாட்டோம் என்று தடுத்துவிட்டனர். இதனால், இருவரும் பிரிந்தனர். குழந்தைகளையும் பறி கொடுத்தனர்.

அபூ ஸலமா (ரலி) அவர்கள் துணிந்தவர். சன்மார்க்கத்திற்காக மனைவியும் மக்களும் போனால் போகட்டும் என்றுவிட்டுவிட்டு தன்னந் தனியே திருமதீனா சென்றுவிட்டார். அபூ ஸலமா (ரலி) அவர்கள் திருமதீனாவிற்கு ஹிஜ்ரத்துச் செய்து ஊருக்கு வெளியில் வந்ததும் கணவரையும் மக்களையும் பிரிந்து தனிமையில் தந்தை குடும் பத்தை அடைந்தார். திருமக்கா விலிருந்து தினந் தோறும் மாலையில் கணவரையும் மக்களையும்

பிரிந்த இடத்திற்கு வருவதும், கதறி அழுவதுமாக இருந்தார். இவ்வாறு ஒரு வருடம் கழிந்தது. கல்நெஞ்சம் படைத்த உறவினர்களின் மனம் கரைந்தது. குழந்தையை அழைத்து வந்து, தாயிடம் ஒப்படைத்தனர். திருமதீனாவில் கணவரிடம் சென்று வாழ அனுமதியும் கொடுத்தனர்.

*மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1115ல் காண்க.*

உம்மு ஸலமா மக்களுடன் மதீனாவிற்குப் புறப்பட்டுவிட்டார். அவர் ஆண் துணையின்றி தன்னந்தனியே செல்வதைப் பார்க்கச் சகியாத உதுமான் இப்னு தல்ஹா இரக்கம் கொண்டார். திருகஅபாவின் சாவியை வைத்துக் கொண்டு அன்றாடம் திறந்துவிடல், பூட்டி வைத்தல் போன்ற பொறுப்பான பணிகளுள்ளவராக இருந்தும், அவரின் துணைக்கு தாமாகச் சென்றார். உம்மு ஸலமாவையும், குழந்தைகளையும் ஒட்டகையின் மீது ஏறச் செய்து அவர் கால் நடையாகச் சென்றார். தங்க வேண்டிய இடம் வந்தால், ஒட்டகையைப் படுக்க வைத்துவிட்டு தூரமாகச் சென்றுவிடுவார். அவர்கள் இறங்கிக் கொள்வர். இவ்விதமாகப் பல இடங்களைக் கடந்து, திருமதீனாவிற்கு சமீபமாக வந்துவிட்டனர். அதன் பேரீத்தந் தோட்டங்களை பார்த்ததும், இதோ பார், நீங்கள் நோக்கி வந்த நகர். இனி நீங்கள் செல்லலாம். நான் இங்கிருந்து மக்காவிற்குத் திரும்பச் செல்கிறேன் என்று அவர்களை அனுப்பி வைத்தார்.





பொருளடக்கம்

## கணவரின் மரணமும் மறுமணமும்

அபூ ஸலமா (ரலி) நல்ல போர்வீரர். பத்ரு, உஹுதுப் போர்களில் வீரதீரமாகப் போரிட்டார். உஹுதுப் போரில் காயமடைந்தார். அக்காயங்கள் ஆறவில்லை. ஹிஜ்ரி 4ம் வருடம் ஜமாதுல் ஆகிர் மாதம் இவ்வுலகை விட்டு அகன்றார்.

ஒரு நாள் அபூ ஸலமா (ரலி), தனது மனைவி உம்மு ஸலமாவிடம், நாம் இருவரும் அந்நியோன் யமாக வாழ்கிறோம். நான் இறந்துவிட்டால், நீ மறுமணம் செய்து கொண்டு, சுகமாக வாழ்வது தான் எனக்கு மகிழ்ச்சி என்று கூறினார். அதற்கவர், நாம் இருவரும் இங்கு கணவன் மனைவிகளாக வாழ்வது தான் எனக்கு மகிழ்ச்சி. எனவே, தாங்கள் மறைந்துவிட்டால், தங்களுக்குப் பின்னர், எத்தனை கஷ்டம் வந்தாலும் அதனைச் சகித்துக் கொண்டிருப் பது தான் எனக்குத் திருப்தி என்று பதிலளித்தாராம்.

இதிலிருந்து தம்பதிகள் இருவரும் எவ்வளவு அந்நியோன்யமாக வாழ்ந்தார்கள் என்பதை யூகித்துக் கொள்ளலாம். அன்றியும், அவருக்கு ஆவிபிரியும் தருவாயில் ''நாயனே! என் குடும்பத் தாரை நல்லவிதமாக கவனித்துக் கொள்வாயாக'' என்ற பிரார்த்தனை அவரின் நாவில் முழங்கிக் கொண்டிருந்ததெனச் சொல்லப்படுகிறது.

அவருடைய ஜனாஸா தொழுகைக்கு மிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஜனாஸா தொழுகையை நிறைவேற்றி வைத்தபோது, வழக்கத்திற்கு மாறாக, ஒன்பது தக்பீர் சொன்னார்கள். தொழுகை முடிந்த பின்னர், நபி (ஸல்)





பொருளடக்கம்

அவர்களிடத்தில் "யாரசூலல்லாஹ், தக்பீர் சொல்லும்போது தங்களுக்கு மறதி ஏற்பட்டு விட்டதோ?" என்று ஸஹாபீகள் வினவினர். அதற்கவர்கள் "இல்லை, அவர் ஆயிரம் தக்பீர்களுக்குத் தகுதியுள்ளவர்" என்று பதிலளித் தார்கள்.

அபூ ஸலாமா (ரலி) இவ்வுலகைவிட்டு மறையும்போது, உம்மு ஸலமா (ரலி) கர்ப்பமுற்று இருந்தார். பிரசவத்திற்குப் பின், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அவரை மணக்க விரும்புவதாக தகவல் அறிவித்தார்கள். அதற்கவர், 1. நான் ரோஷமுள்ள பெண், 2. குழந்தைகள் உள்ளவள், 3. வயது முதிர்ந்தவள், 4. தாங்கள் கொடுக்கும் வாழ்க்கைச் செலவை, என் மக்களைப் பரிதவிக்க விட்டுவிட்டு, நான் மட்டும் அனுபவிக்க முடியாது. அவர்களுக்கும் அதனைக் கொடுப்பது முறையாகாது என்று பல காரணங்களைக் கூறினார். குழந்தைகளைப் பராமரிக்கத்தான் திருமணத்தை விரும்புகிறேன் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தெரிவித்ததன் காரணமாக திருமணம் நடந்தது.

அபூ ஸலமா (ரலி) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மாமியின் புதல்வர். மைத்துனர். அத்துடன் பால்குடிச் சகோதரரும் ஆவார். சிறுசிறு குழந்தைகளை விட்டுச் சென்றுவிட்டார். அபிசீனியா, மதீனா ஆகிய இரு ஹிஜ்ரத்துக்களையும் மேற்கொண்டு இஸ்லாத்திற் காக பல கஷ்டங்களைச் சகித்தவர். அவருடைய விதவையான உம்மு ஸலமா (ரலி), இரண்டு ஹிஜ்ரத்துக்களிலும் கணவருடன் சேர்ந்து பல

கஷ்டங்களை அனுபவித்தவர். சன்மார்க்கப் போரில் கணவரை இழந்தவர். எனவே, அவரையும் அவர் குழந்தைகளையும் தவிக்க விடாமல், பராமரித்துக் காக்க வேண்டும் என்ற நோக்கத்தில், இவரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்தார்கள்.

திருமணம் செய்தபோது அம்ரு, ஸலமா என இரு புதல்வர்களும், ஜைனபு, துர்ரா, உம்முகுல்தூம் என்று மூன்று புதல்விகளும் இருந்தனர். இவர்கள் யாவரையும் பராமரிக்கும் பொறுப்பை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள்.

## மறைவு

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் துணைவியர்கள் யாவருக்கும் கடைசியில் இவ்வுலகை விட்டுப் பிரிந்தவர் அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்கள் தான் என்று எல்லா வரலாற்றறிஞர்களும் ஏகமனதாக குறிப்பிட்டுள்ளார்கள். ஆனால், அவர்கள் எந்த வருடத்தில் பிரிந்தார்கள் என்பதில் ஹிஜ்ரி 58, 59, 61, 63 என்று நான்கு விதமாகக் கூறி இருக்கின்றனர். ஸெய்யிதுனா இமாம் ஹுசைன் (ரலி) அவர்கள் கர்பலாவில் ஷஹீதான செய்தி வந்த பின்னர் மறைந்ததாக சில செய்திகளில் கூறப்பட்டிருக் கிறது.

ஹாரிதுப்னு அப்தில்லாஹிப்னு அபீ ரபீ ஆ(ரஹ்) என்பவரும், அப்துல்லாஹிப்னு ஸப்வான் (ரஹ்) என்பவரும் அன்னை (ரலி) அவர்களிடம் வந்து ''பூமிக்குள் அழுத்தப்படும் படையைப் பற்றிய





பொருளடக்கம்

விளக்கம் கேட்ட சந்தர்ப்பத்தில் தான் ஷாம் தேசத்திலிருந்து திருமதீனாவை நோக்கி ஒரு படையை முஸ்லிமுப்னு அக்பாவின் தலைமையின் கீழில் யஜீதுப்னு முஆவியா அனுப்பி வைத்தார். திருமதீனாவிற்குப் பக்கத்தில் இப்படை போரிட்டது. இப்போரைத் தான் ஹர்ரா போர் என்பர். இப்போர் ஹிஜ்ரீ 63ம் ஆண்டில் நடைபெற்றது. ஆதலால் ஹிஜ்ரி 63ம் ஆண்டு வரையில் அன்னை (ரலி) அவர்கள் வாழ்ந்தார்கள் என்று கொள்வது தான் சரியான கருத்து எனத் தோன்றுகிறது.

அன்னை (ரலி) அவர்களின் ஜனாஸா தொழுகையை ஸஈதுப்னு ஜைத் (ரலி) நிறை வேற்றிவைத்ததாக சில அறிவிப்புகளில் கூறப் பட்டிருக்கிறது. எனினும், ஸயீதுப்னு ஜைத் (ரலி) ஹிஜ்ரீ 51, 52, 55ல் மறைந்ததாக மூன்று செய்திகள் கூறுகின்றன. எனவே, அவர் ஜனாஸா தொழுகையை நிறைவேற்றி வைத்தார் என்பது சரியாக இருக்க முடியாது. ஹளரத் அபூ ஹுரைரா (ரலி) நிறைவேற்றி வைத்தார் என்று இதர அறிவிப்புகள் கூறுகின்றன. இது சரியானதாக இருக்கலாம். அன்னை (ரலி) அவர்களின் மறைவின் போது அவர்களுக்கு வயது 84.

கல்வியறிவில் அன்னை ஆயிஷா ஸித்தீக்கா(ரலி) அவர்களுக்கு அடுத்தபடியாக இவர் விளங்கினார். ஹுதைபிய்யா உடன்படிக்கையை முடித்துக் கொண்டு திரும்பியபோது உம்ராச் செய்யாமல் திரும்புவதற்கு மனமில்லாமல் ஸஹாபிகள் தயங்கிய போது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கவலை அடைந்தார்கள். தாங்கள் முதலாவதாக குர்பானியை





பொருளடக்கம்

பலியிட்டு, தலை முடியை அகற்றி, இஹ்ராமை மாற்றுங்கள்.

தங்களைப் பார்த்தவுடன், தங்கள் தீர்மானம் இறுதியானது என்பதை அவர்கள் உணர்ந்து, இஹ்ராமை மாற்றிப் புறப்பட்டுவிடுவார்கள் என்று கூறினார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதன்படி செய்தார்கள்.

*மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1155ல் காண்க.*

திருமக்காவை நோக்கி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் படையெடுத்து வந்தபோது, அவர்களின் பெரிய தந்தை ஹாரிதின் புதல்வர் அபூ ஸுஃப்யானும், மாமியின் புதல்வர் அப்துல்லாஹ்வும் திருமக்காவை விட்டு வெளியேறி, வழியில் சந்தித்தனர். அவ்விருவரும் சன்மார்க்கத்திற்கு எதிராகச் செய்த காரியங்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நினைத்து, அவ்விருவருக்கும் பேட்டியளிக்க மறுத்தார்கள். அந்த சந்தர்ப்பத்தில் அன்னை (ரலி) அவர்கள் அவ்விருவரையும் மன்னிக்குமாறு சிபாரிசு செய்தார்கள். இவ்விபரங் களை மௌலா னா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் மூன்றாம் பாகத்தில் காண்க.

## உறவினர்கள்

**புதல்வர் உமர் இப்னு அபீ ஸலமா (ரலி):**

இவர் ஹிஜ்ரீ 2ம் வருடத்தில் பிறந்தார். ஹளரத்





பொருளடக்கம்

அலீ (ரலி) அவர்கள் கலீபாவாக இருந்தபோது பாரசீகத்திற்கும் பஹ்ரைனுக்கும் அதிபதியாக இருந்தார். ஹிஜ்ரீ 83ம் ஆண்டில் காலமானார். ஸஈதுப்னு முஸய்யப் (ரஹ்) அபூ உமாமத் தப்னுஸஹ்ல் (ரஹ்), உர்வத்துப்னு ஜுபைர் (ரஹ்) முதலியவர்கள் இவரிடமிருந்து ஹதீஸ்களைக் கேட்டு ரிவாயத்துச் செய்து இருக்கின்றனர். (மற்றவர்களுக்கு அறிவித்திருக்கிறார்கள்.)

**புதல்வர் ஸலமத்துப்னு அபீ ஸலமா (ரலி):** உஹதுப் போரில் ஷஹீதான ஸெய்யிதுஷ் ஷுஹதா ஹம்ஜா (ரலி) அவர்களின் புதல்வி உமாமா (ரலி) என்பவரை, இவருக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்து வைத்தார்கள். அப்துல் மலிக்கிப்னு மர்வானின் ஆட்சிக் காலத்தில் இவர் காலமானார். இவரால் ஹதீஸ்கள் அறிவிக்கப்பட வில்லை.

**புதல்வி ஜைனபு பின்து அபீ ஸலமா (ரலி):** நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மைத்துனரும் ஸௌதா பின்து ஜம்ஆ(ரலி) அவர்களின் சகோதரருமான அப்துல்லா ஹிப்னு ஜம்ஆ (ரலி) என்பவருக்கு இவர் திருமணம் செய்து வைக்கப்பட்டார். இவர் தம் காலத்திலுள்ள ஏனைய பெண்களைக் காட்டிலும் அதிகமாக சன்மார்க்கச் சட்டம் தெரிந்தவர். இவர் அபிசீனியா வில் பிறந்தவர்.

இவர் குழந்தையாக இருந்தபோது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது பக்கத்தில் சென்றார். அவருடைய முகத்தில் நபி ஸல்லல்லாஹு


பொருளடக்கம்

அலைஹி வஸல்லம் அவர்கள் பிரியமுடன் நீரைத் தெளித்தார்கள். அதன் பரக்கத்தால் அவருடைய ஆயுள் முழுவதிலும் முகத்தில் களையும் தேஜஸும் மாறவில்லை.

இவருடைய இருபுதல்வர்களும் ஹர்ராவில் நடந்த போரில் ஷஹீதானார்கள். இருவருடைய உடல்களும் அவர் எதிரில் வைக்கப்பட்டபோது இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன் என்று கூறிவிட்டு, இவ்விருவரும் மறைந்தது எனக்கு பெருத்த நஷ்டம் தான். ஒரு நஷ்டத்தைப் பார்க்கினும் இன்னொரு நஷ்டம் மிகப் பெரியது. முதலாமவர் வீட்டில்தான் இருந்தார். போரிடுவதை விட்டு விலகி இருந்தார். அநியாயமாகக் கொல்லப் பட்டார். இவருக்கு சுவர்க்கம் கிடைக்கும் என நம்புகிறேன். மற்றொருவர் கையை ஆட்டிப் போரிட்டுக் கொல்லப்பட்டார். இவர் முடிவு என்னவென்று நான் கூறமுடிய வில்லை. இதனைத் தான் பெரிய நஷ்டம் என்று கூறுகிறேன் என்றார்.

**புதல்வி உம்மு குல்தூம் பின்து அபீ ஸலமா(ரலி):** அபிசீனிய மன்னர் நஜ்ஜாஷியின் மரணத்தையும், தாங்கள் அனுப்பிய காணிக் கைகள் திரும்ப வருவதைப் பற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்னறிக்கை செய்ததையும் பற்றி இவர் கூறிய ஹதீஸை மூஸப்னு அக்பா (ரஹ்) அறிவித் துள்ளார்.

**புதல்வி துர்ரா பின் அபீ ஸலமா (ரலி) :** இவரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்யக் கருதுகிறார்களா? என்று அன்னை உம்மு ஹபீபா (ரலி) ஆள் மூலம் விசாரித்ததற்கு அவர் எனது வளர்ப்புப் பிள்ளையாக





பொருளடக்கம்

இல்லாதிருந்தாலும் கூட எனக்கு அவர் ஹலால் இல்லை. ஏனெனில், அவருடைய தந்தை எனது பால்குடி சகோதரர் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதிலளித்தார்கள்.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1790ல் காண்க.

**சகோதரர்கள்:** ஜுஹைர் (ரலி), அப்துல்லாஹ்(ரலி) முஹாஜிர் (ரலி) ஆகியவர்கள் சகோதரர்கள். இவர்களில் ஜுஹைரைப் பற்றிய விவரம் தெரியவில்லை. அப்துல்லாஹ் (ரலி) என்பவர் இவரின் மாற்றாந்தாயும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மாமியுமான ஆத்திக்கா (ரலி) என்பவரின் புதல்வர்.

அப்துல்லாஹ் (ரலி) திருமக்கா வெற்றிக்கு மூன்று நான்கு நாட்களுக்கு முன்னர் மதீனா செல்லும் வழியில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பேட்டி கண்டு இஸ்லாத்தைத் தழுவி தம்முடைய முந்தைய செய்கைகளுக்கு மன்னிப்புக் கோரினார். திருமக்கா வெற்றி, ஹுனைன் போர், தாயிப் போர் ஆகியவற்றில் கலந்து கொண்டார். தாயிப் போரில் அம்புக் காயமடைந்து தாயிபில் ஷஹீதானார்.

ஆமிர் (ரலி) என்பவர் முஅல்லபத்துல் குலூப் அதாவது புதிய முஸ்லிம். அவரது மனம் கலங்காதிருக்கட்டும் என்பதற்காக உதவி செய்யப் பட்டவர்களில் இவரும் ஒருவர்.

அன்னை (ரலி) அவர்களுடன் முஹாஜிர் (ரலி) பிறந்தவர். யமன் நாட்டு மன்னர் ஹாரிதுப்னு அப்து





பொருளடக்கம்

கலால் ஹிம்யரீ இடத்தில் தங்களுடைய தூதராக இவரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனுப்பி வைத்தார்கள். பின்னர் கந்தர், ஸதப் ஆகிய இடங்களில் ஸதக்காக்களை வசூல் செய்யும் அதிகாரியாக நியமிக்கப்பட்டார். ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் காலத்தில் யமன் நாட்டதிபராக இருந்தார். ஹள்ர மவ்த்திலுள்ள நுஜைர் கோட்டையை இவர் தான் வென்றார்.

ஒன்று விட்ட சகோதரர்கள்: ஸைபுல்லாஹ் (அல்லாஹ்வின் வாள்) என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் புகழப்பட்ட காலிதுப்னுல் வலீத் (ரலி), வலீதுப்னு வலீத் (ரலி), ஹிஷாமுப்னுல் வலீத் (ரலி) ஆகிய மூவரும் அன்னை (ரலி) அவர்களின் தந்தையுடன் பிறந்தவரான வலீதுப்னுல் முஙய்யராவின் மக்கள். இவர்களில் வலீதுப்னு வலீத் (ரலி) என்பவர் தான் மூத்தவர். தம் சகோதரர்களில் யாவருக்கும் முதலில் இஸ்லாத்தைத் தழுவியது மட்டுமின்றி காலிதுப்னு வலீதை இஸ்லாத்தில் சேர்க்கும் விஷயத்தில் அக்கறை எடுத்துக் கொண்ட விவரம் மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் இரண்டாம் பாகம் காலிதுப்னுல் வலீத் (ரலி) இஸ்லாத்தைத் தழுவல் என்ற, தலைப்பின் கீழில் எழுதப்பட்டுள்ளது. வலீதுப்னுல் வலீத் (ரலி) காலமான போது அவரது பிரிவைக் குறித்து அன்னை (ரலி) இரங்கற் பாக்கள் இயற்றினார்.

## ரிவாயத்துகள்

ஸஹீஹுல் புகாரி, முஸ்லிம் ஆகிய இரண்டும் ஏகமனதாக எழுதியவை பதின்மூன்று. ஸஹீஹுல்





பொருளடக்கம்

புகாரியில் மட்டும் எழுதியவை 3. முஸ்லிமில் மட்டும் 13. இதர கிரந்தங்களில் எழுதப்பட்டவை 349. ஆக மொத்தம் 378 முன்னூற்று எழுபத்தெட்டு ஹதீஸ்கள் இவரால் கூறப்பட்டிருக்கின்றன.

# 7 அன்னை உம்மு ஹபீபா (ரலி)

இவரது இயற்பெயர் ரமலா. காரணப் பெயர் உம்மு ஹபீபா. தந்தை உஹதுப் போரில் குறைஷிப் படைக்கு பிரதம தளபதியாக இருந்த அபூ ஸுஃப்யான் (ரலி). ஆரம்ப காலத்திலேயே இவ்வம்மை இஸ்லாத்தை தழுவியவர். உபைதுல்லாஹிப்னு ஜஹ்ஷ் என்பவரை மணந்திருந்தார். கணவரும் மனைவியுமாக சேர்ந்து அபிசீனிய நாட்டிற்கு ஹிஜ்ரத்துச் செய்தனர். கணவர் மது அருந்துபவர். அளவுக்கு மீறி மது அருந்தும் தன்மையினர். அபிசீனியாவில் கிறிஸ்தவர்களுடன் சேர்ந்து மது அருந்திக் கொண்டிருந்ததால், அந்த உறவு முற்றி கிறிஸ்தவ மார்க்கத்தைத் தழுவிவிட்டார்.





பொருளடக்கம்

உம்மு ஹபீபா (ரலி) அங்கு சென்றும் இஸ்லாத்தில் உறுதியாக இருந்தார். இஸ்லாத்திற்காக தந்தை, சகோதரர், சுற்றத்தார் முதலிய உறவினர்களையும் பிறந்த ஊரையும் துறந்து அந்நிய நாட்டில் குடியேறியவர். அங்கு கணவரின் ஆதரவு மட்டும்தான் இருந்தது. அவர் மதம் மாறிவிட்டதால், அந்த ஆதரவும் அற்றது. இவருடைய திக்கற்ற நிலையை அறிந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அபிசீனிய மன்னர் நஜ்ஜாஷிக்கு; அம்ருப்னு உமய்யத்தல் ளம்ரீ (ரலி) மூலம் அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்களை திருமணம் செய்து கொள்ளும் விருப்பத்தை அறிவித்தார்கள். தம் உடைகளைச் சுத்தம் செய்து மணமிட்டு வைக்கும் பணியில் அமர்த்தப்பட்ட பணியாளியின் மூலம், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் செய்தியை அறிவித்து, அவருடைய சம்மதத்தை அபிசீனிய மன்னர் கேட்டார். தம்மை உம்முல் முஃமினீன் என்று அழைப்பது போல அவர் கனவும் கண்டார். அச்சந்தர்ப்பத்தில் இச்செய்தியும் அவருக்கெட்டிற்று. இறைவனுக்கு நன்றி செலுத்தி விட்டு, திருமணச் செய்தியைக் கொண்டுவந்த பணிப்பெண்ணுக்கு தம் உடலில் இருந்த ஆபரணங்கள் அத்தனையையும் கழற்றி அன்பளிப்பாக கொடுத்துவிட்டார்.

பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சார்பாக நஜ்ஜாஷி மன்னரும், உம்மு ஹபீபா (ரலி) சார்பாக காலிதுப்னு ஸஈத் (ரலி) அவர்களும் வக்கீல்களாக இருந்து அரச தர்பாரில் திருமண ஒப்பந்தம் ஏற்பட்டது.



பொருளடக்கம்

இந்நிகழ்ச்சிக்கு அபிசீனிய நாட்டிற்கு ஹிஜ்ரத்துச் செய்த முஸ்லிம்களும் அழைக்கப் பட்டிருந்தனர். திருமண வைபவம் முடிந்தவுடன் யாவரும் புறப்பட்டனர். அவர்களைப் போக வேண்டாம் என்று நஜ்ஜாஷி நிறுத்தி வைத்து திருமணத்திற்குப் பின்னர் விருந்தளிப்பது, நபிமார்களின் ஸுன்னத்து (வழிமுறை) எனவே, வலீமா விருந்தை அருந்திவிட்டுச் செல்லலாம் என்று கூறி, அவர்கள் யாவருக்கும் விருந்தளித்தார்.)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சார்பாக நஜ்ஜாஷி மன்னர், நானூறு தங்க நாணயங்களை, காலிதுப்னு ஸயீத் (ரலி) அவர்களிடம் மகராகக் கொடுத்தார். இத்தொகையை அதே பணிப் பெண்ணான அப்புஹா என்பவள், அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்களிடம் கொடுத்தபோது, அதிலிருந்து ஐம்பது தீனார்களை அவளுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். அவள் அதனை அந்தச் சமயத்தில் வாங்கிக் கொண்டாள். ஆயினும், பின்னர் திரும்ப வந்து, அப்பணத்தையும் அதற்கு முன்னர் வாங்கிய ஆபரணங்களையும் திரும்பக் கொடுத்து, இவற்றை வாங்கவேண்டாம் என்று மன்னர் தடுத்துவிட்டதாகத் தெரிவித்தார்.

மறுநாள் ஊதுபத்தி, குங்குமப்பூ, அம்பர் முதலியவற்றுடன் அதே பணிப்பெண் வந்து மன்னரின் அன்பளிப்பு என்று அளித்தார். அவற்றை அன்னை (ரலி) ஏற்றுக்கொண்டு திருமதீனாவிற்குக் கொண்டுவந்து, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கொடுத்தார். திருமணக் காரியங்கள் முடிவடைந்த பின்னர், ஷர்ஹபீலுப்னு ஹஸனா (ரலி) அவர்களுடன் திருமதீனாவை





பொருளடக்கம்

அடைந்த விபரம் மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் மூன்றாம் பாகம் கைபர் போர் பற்றிய விபரத்தில் எழுதப்பட்டிருக் கிறது) மகர் தொகை எவ்வளவு என்பதைப் பற்றி வரலாற்றாசிரியர்கள் ஒரு முகமான கருத்துக்களைக் கூறவில்லை. எனினும், நானூறு தீனார் என்பது தான் பிரபலமான சொல்.

ஹுதைபிய்யா உடன்படிக்கையைப் புதுப்பிப் பதற்காக அபூ ஸுப்யானிப்னு ஹர்ப் திருமதீனா விற்கு வந்தபோது தமது செல்வி அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்றார். அங்கு ஒரு விரிப்பு இருந்தது. அதில் அவர் அமரப் போன சமயம், அன்னை (ரலி) அவர்கள் அதனை எடுத்துச் சுருட்டி வைத்துவிட்டார். அப்பொழுதவர் மகளை நோக்கி, செல்வமகளே! என்னை விட்டுவிரிப்பை அகற்ற விரும்பினாயா? அல்லது விரிப்பைவிட்டு என்னை அகற்ற விரும்பினாயா? என்று வினவினார். அதற்கு அன்னை (ரலி) அவர்கள் "அருமைத் தந்தையே, அது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் விரிப்பு. தாங்கள் முஷ்ரிக்கு (இணைவைப்பவர்) அதில் தாங்கள் அமர முடியாது" என்று பதிலளித்தார். அவருக்குக் கோபம் வந்து "மகளே, எங்களை விட்டுப் பிரிந்து கெட்டுப்போனாய்" என்று கூறிவிட்டுத் திரும்பினார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அபிமானத்திற்கு முன்னர் தந்தையைக் கூட இலட்சியம் செய்யாத இப்பேரன்பின் பலனாக இறைவன் 'உம்முல் முஃமினீன்' ஆகும் பாக்கியத்தை அவருக்கு அளித்தான்.





பொருளடக்கம்

## உறவினர்கள்

அபூ சுப்யான் ஸக்ருப்னு ஹர்ப் (ரலி). அன்னை (ரலி) அவர்களின் தந்தை. ஆரம்ப காலத்தில் இஸ்லாத்தை எதிர்த்த பகைவர்களின் முன்னணி யில் இருந்தார். உஹதுப் போரில் குறைஷியரின் பிரதம தளபதியாக வந்தார். அரபு நாட்டுக் கோத்திரங்கள் ஐக்கியமடைந்து போரிட்ட அகழ்ப் போரில் ஐக்கியப் படைக்கு பிரதம தளபதியாகவும் இருந்தார்.

திருமக்காவின் வெற்றிக்கு முதல்நாள் இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவினார். ஹுனைன், தாயிப் போர்களில் முஸ்லிம்கள் சார்பாகப் போரிட்டார். ஹளரத் உமர் பாரூக் (ரலி) அவர்கள் காலத்தில் கிறிஸ்தவப் படையை எதிர்த்து நடத்திய யர்மூக் போரில் உறுதி குன்றாதிருந்து முஸ்லிம் படையை முன்னேறச் செய்தார். ஹிஜ்ரீ 32ம் வருடத்தில் 92ம் வயதில் காலமானார்.

## சகோதரர்கள்

யஜீதுப்னு அபீஸுப்யான் (ரலி), அன்னை (ரலி) அவர்களுடன் பிறந்தவர். இவருக்கு யஜீதுல் கைர் (நல்ல யஜீது) என்ற சிறப்புப் பெயருண்டு. திருமக்காவின் வெற்றியன்று இஸ்லாத்தை தழுவினார். ஷாம் தேசத்தைக் கைப்பற்ற முதல் கலீபா ஸெய்யிதுனா அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் நியமித்த நான்கு தளபதிகளில் இவரும் ஒருவர். ஹிஜ்ரி 19ம் வருடத்தில் டமாஸ்கஸ் நகரில் காலமானார். அச்சமயத்தில் இவர் ஷாம் தேசம் முழுவதற்கும் அதிபதியாக இருந்தார்.





பொருளடக்கம்

முஆவியத்துப்னு அபீஸுஃப்யான் (ரலி) என்பவர் அன்னை (ரலி) அவர்களின் மாற்றாந்தாயின் புதல்வரான சகோதரர். இருபது வருடகாலம் ஷாம் தேச அதிபராகவும், பத்தொன்பதரை வருட காலம் கலீபாவாகவும் இருந்தார். உமய்யா வம்சத்து அரசாங்கத்திற்கு ஸ்தாபகர். ஹிஜ்ரி 60ம் வருடம் ரஜபு மாதம் 22ம் தேதி 82ம் வயதில் காலமானார்.

## ரிவாயத்துகள்

ஸஹீஹுஃல் முஸ்லிமில் மட்டும் ஒன்று. புகாரி முஸ்லிம் ஆகிய இரண்டிலும் எழுதியவை இரண்டு. இதர நூல்களில் அறுபத்திரண்டு. ஆக மொத்தம் அறுபத்தைந்து ஹதீஸ்கள்.

# அன்னை ஜைனபு பின்து ஜஹ்ஷ் (ரலி)

அன்னை ஜைனபு பின்து ஜஹ்ஷ் (ரலி) அவர்களின் தந்தை அஸதீ கோத்திரத்தைச் சேர்ந்தவர். அவருடைய தாயார் உமைமா. குறைஷி கோத்திரத்தில் ஹாஷிம் குலத்தைச் சார்ந்தவர். ஹளரத் அப்துல் முத்தலிபின் புதல்வி. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தந்தையுடன் பிறந்த மாமி.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வளர்ப்பு மகன் என்று ஒரு காலத்தில் கொண்டாடப்பட்ட ஜைதுப்னு ஹாரிதா (ரலி) என்பவருக்கு இவர் திருமணம் செய்து வைக்கப்பட்டார். இவருடைய தந்தை வழி குஜாஆ கோத்திரமாகும். தாய்வழி, தைய்யிக் கோத்திர மாகும். ஆனால், அவர் குழந்தையாக இருக்கையில் ஒரு கூட்டத்தார் அவரைப் பிடித்துக் கொண்டு வந்து திருமக்காவிற்குப் பக்கத்தில் கூடுகிற வருடாந்திரச் சந்தையாகிய சூக்குல் ஹம்பா ஷாவில் விற்றுவிட்டனர்.

அன்னை கதீஜா (ரலி) அவர்களின் உதவியா ளரான ஹக்கீம் இப்னு கிஜாம் (ரலி) தமது எஜமாட்டிக்காக அவரை விலைக்கு வாங்கிக் கொண்டு வந்தார். பின்னர் அன்னை (ரலி) அவர்களை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்தபோது, கணவருக்குக் அன்பளிப்பாக அவரைக் கொடுத் தார். அவருடைய பெற்றோர்களுக்கு தங்கள் புதல்வர் இருக்குமிடம் தெரிந்தபோது, அவரை மீட்டிக் கொண்டுபோக தந்தையும், சிறிய தந்தையும்





பொருளடக்கம்

வந்தனர். அவர்களுடன் செல்ல அவர் மறுத்துவிட்டதால், அவர்கள் அழைத்துச் செல்ல வில்லை. இச்சம்பவத்திலிருந்து அவர் சுதந்திரர், நற்குடியில் பிறந்தவர் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியவந்தது. எனவே, தங்களது மைத்துனியை அவருக்கு திருமணம் செய்து வைத்தார்கள்.

ஜைனபு (ரலி) அவர்களும், அவருடைய உறவினர்களும் ஆரம்பத்தில் இணங்கவில்லை. சுதந்திரனாகப் பிறந்த ஒருவரை விலைக்கு வாங்கிவிட்டால், அவர் அடிமையாகிவிட மாட்டார். சுதந்திரன் சுதந்திரனே ஆவான் என்ற நியதியை நிலைநாட்டி விட வேண்டும் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் எண்ணம் போலும். எனவே, இத்திருமணத்தைக் கைவிடவில்லை. அதற்கு உதவியாக,

وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَّلَا مُؤْمِنَةٍ اِذَا قَضَى اللّٰهُ وَرَسُوْلُهٗ اَمْرًا اَنْ
يَكُوْنَ لَهُمُ الْخِيَرَةُ مِنْ اَمْرِهِمْ وَمَنْ يَّعْصِ اللّٰهَ وَرَسُوْلَهٗ فَقَدْ
ضَلَّ ضَلٰلًا مُّبِيْنًا

"அல்லாஹ்வும், நபியும் ஒரு காரியத்தைத் தீர்மானித்துவிட்டால் அதில் வேறு அபிப்பிராயம் கொள்வதற்கு மூமினுக்கோ மூமினான பெண்களுக்கோ உரிமையில்லை" *(33:36)* என்ற திருக்குர் ஆன் வசனம் அருளப்பட்டதன் காரணமாக திருமணத்திற்கு இணங்கினர்.

இத்திருமணத்தின் மூலம் சுதந்திரனாகப் பிறந்த

எவரையும், தனிநபர் தன் சொந்த நலனைக் கருதி பலவந்தமாக விற்பனை செய்வதால், அடிமையாகி விடமாட்டார் என்பதுடன் மற்றொரு பெரிய சீர்திருத்தத்திற்கு அவரையே இறைவன் தேர்ந் தெடுத்தான்.)

## தத்தெடுத்தல்

ஒருவருக்கு குழந்தை இல்லாவிடில் வேறு ஒருவருடைய குழந்தையை பெற்றோர் சம்மதத் துடன் தன் குழந்தையாக தத்தெடுத்துக் கொள்வது எல்லா நாடுகளிலும் பொதுவாக இருந்து வருகிறது. ஆண் குழந்தை இல்லாதவர் ஆணையும், பெண் குழந்தை இல்லாதவர் பெண்ணையும், தத்தெடுத்துக் கொள்கின்றனர். குழந்தை உள்ளவர்க ளிலும் கூடச் சிலர் தத்தெடுத்துக் கொள்கின்றனர். வெளித்தோற்றத்திற்கு இது நல்ல வழக்கமாகத் தோன்றிடினும், அந்தரங்கத்தில் இது ஒழிக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

இது அல்லாஹ்வை எதிர்ப்பதற்கு ஒப்பான தாகும். சந்ததியைத் தருபவன் அவன் ஒருவனே. எவரும் தன் விருப்பத்திற்கு சந்ததியை ஏற்படுத்திக் கொள்ள முடியாது. குழந்தை இல்லாத ஒருவன் அல்லாஹ்விடத்தில் குழந்தையைத் தராவிடில் எனக்குக் குழந்தை இல்லாமல் போய்விடுமா? நானாகக் குழந்தையை ஏற்படுத்திக் கொள்கிறேன்" என்று சொல்வது போல் இருக்கிறது இச்செய்கை.

இப்படி தத்தெடுத்துக் கொள்வதால், குழந்தை இல்லாதவரின் உறவினர்களும் வாரிசுகளும் அக்குழந்தையை நேசிக்கமாட்டார்கள். ஏனெனில்,





பொருளடக்கம்

செயற்கை முறையில் புதிய வாரிசை ஏற்படுத்தி, மெய்யான வாரிசுகள் இதன் மூலம் வாரிசு பாத்தியதையை இழக்கச் செய்யப்படுகின்றனர். அதிலும் தத்தெடுத்துக் கொள்பவர் செல்வந்தராக இருந்தால், இயற்கை வாரிசுகளுக்கும் செயற்கை வாரிசுகளுக்கும் தீராத விவகாரங்களும் போராட்டங்களும் ஏற்படும்.

தத்தெடுக்கப்பட்டவர் தன்னுடைய யதார்த்தமான குடும்பத்திலிருந்து துண்டிக்கப்பட்டு, வேறொரு குடும்பத்துடன் இணைக்கப்படுகிறார். எனவே, அவருடைய மனமும் நிம்மதி இல்லாமலேயே இருக்கும். ஏனெனில், தத்தெடுத்தவர்தான் குழந்தையை அருமை பெருமையாக வைத்துக் கொள்வார். அவருடைய இதர உறவினர்கள் பொறாமை, துவேஷம் ஆகிய கண்களாலேயே நோக்குவர். எனவே, அவர் பிறந்த இடத்தில் பிடி இல்லாமலும், சேர்ந்த இடத்தில் ஐக்கியமில்லாமலும் தத்தளிக்கும் நிலையிலேயே இருப்பார். வெளித் தோற்றத்தில் வேண்டுமானால் நிம்மதியுள்ளவர் போல் காட்சியளிக்கலாம். அந்தரங்கத்தில் நிம்மதி இருக்காது. அதினும், தத்தெடுக்கப்பட்டவர் நல்ல நிலையிலும், அவருடைய சகோதரர்கள் அதற்கு மாறாகவும் இருந்தால், சகோதரர்களின் பொறாமைக்கும், பகைமைக்கும் இலக்காக நேரிடும். இதற்கு நேர்மாறாக இருந்தால், தன்னை பெற்ற தாய், தந்தை, சகோதரர்கள் முதலிய யாவர் மீதும் பகைமை கொள்ளும் நிலையும் சில சமயங்களில் ஏற்படலாம். அபூர்வமாக ஒரிருவர் இந்த நிலைகளை விட்டுத் தப்பி இருக்கலாம். பெரும்பாலரின் நிலை சிரமமாகவே இருக்கும்.





பொருளடக்கம்

தத்து கொடுத்தவரான யதார்த்தமான தந்தை, தன் புதல்வர் வேறு குடும்பத்தில் நல்ல நிலையிலிருப்பதைப் பார்க்கும் போது மகிழ்ச்சியடைவார். அங்கு தன் புதல்வருக்குக் கஷ்டங்களும், தொல்லைகளும் ஏற்படுவதைப் பார்த்தால், தன்னால் தான் கஷ்டம் வந்தது என்று கவலைப்படுவார். இது போல குழந்தையின் பண்பும், நடத்தையும் நல்லவிதமாக இருந்தால், தத்தெடுத்தவர் மகிழ்வார். அதற்கு நேர்மாறாக இருந்தால், அவரும் கவலையடைவார். எனவே, தத்தெடுப்பதாலும் கொடுப்பதாலும் எவரும் மகிழ்ச்சி அடைவதில்லை.

இத்தீய பழக்கத்தைத் திருத்த அல்லாஹ் நாடினான்

مَا كَانَ مُحَمَّدٌ اَبَآ اَحَدٍ مِّنْ رِّجَالِكُمْ وَلٰكِنْ رَّسُوْلَ اللّٰهِ

''முஹம்மது உங்களிலுள்ள ஆடவர்கள் எவருக்கும் தந்தையல்லர்'' *(33:40)* என்ற வசனத்தை இறக்கினான்.

وَمَا جَعَلَ اَدْعِيَائَكُمْ اَبْنَائَكُمْ ذَالِكُمْ قَوْلُكُمْ بِاَفْوَاهِكُمْ
وَاللّٰهُ يَقُوْلُ الْحَقَّ وَهُوَ يَهْدِي السَّبِيْلَ

அத்துடன் ''இன்னும் உங்கள் (புதல்வர்) என்று வாதிக்கப்படுபவர்களை உங்கள் புதல்வர்களாக ஆக்கவில்லை. இது உங்கள் வாய்களால் மொழியப்படும் உங்களுடைய சொல். மேலும், அல்லாஹ் சத்தியத்தைக் கூறுகிறான். அவன் நேர்வழியைக் காட்டுகிறான். அவர்களுடைய யதார்த்தமான தந்தையர்களுக்கே அவர்களை





பொருளடக்கம்

அழையுங்கள். அது அல்லாஹ்விடத்தில் நீதியானது" அல்குர்ஆன் (33:4,5) என்றும் அறிவித்து, தத்தெடுப்பது இஸ்லாத்தில் ஏற்புடையதல்ல என்று அறிவித்தான்.

தொன்றுதொட்டு எல்லா நாடுகளிலும் எல்லா மக்கள் இடையிலும் பல நூற்றாண்டுகளாக ஊறிப்போயிருக்கிற இந்தப் பழக்கத்தை ஒரு உத்தரவின் மூலம் நிறுத்தி விடுவது என்பது சிரமம். என்றாலும், இதற்கு முன்னுதாரணம் தேவை. அதுவும் சாமான்யர்களால் காண்பிக்கப்படும் முன்னுதாரணம் எளிதில் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. முக்கியமான இடத்திலிருந்து இவ்வு தாரணம் வெளியாக வேண்டும். எனவே, அவர்களே இந்த உதாரணத்திற்கு இலக்காக இருக்கும்படி அல்லாஹ் செய்தான்.

ஜைனபு (ரலி) அவர்களை ஜைதுப்னு ஹாரிதா(ரலி) திருமணம் செய்தார். அவ்விருவரும் பல ஆண்டு கணவன் மனைவியாக வாழ்ந்தனர். ஆயினும், இருவருக்குமிடையில் ஒற்றுமை யில்லை. உம்மு அய்மன் (ரலி) என்ற முன்னால் அடிமைப் பெண். தம்மைப் பார்க்கினும் வயதில் இரண்டு மடங்கு மூத்தவளாக இருந்தும் அவளை திருமணம் செய்து அந்நியோன்யமாக குடும்பத்தை நடத்தி வந்த ஜைதுப்னு ஹாரிதா (ரலி), தன்னிலும், இளைய பெண்ணான ஜைனபு (ரலி) உடன் வாழ்க்கை நடத்த இயலவில்லை. இவ்விபரத்தை அவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் முறையிட்டு, திருமணத்தை முறித்துக் கொள்ள அனுமதி கோரினார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்





பொருளடக்கம்

அவர்கள், நபி என்ற முறையில் வேதக் கட்டளையை ஓதிக்காண்பித்த பின்னர், இறை சட்டத்திற்கு மரியாதை கொடுத்து, திருமணம் செய்து கொள்ள இணங்கிய ஜைனபு (ரலி), திருமண முறிவிற்கு உள்ளாக்கப்படுவதை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விரும்பவில்லை. கணவன் மனைவிக்கிடையில் ஒற்றுமை இன்றி திருமணப் பிரிவினை பேச்சுவரை முற்றிவிட்ட பின்னர், அது உடனடியாக இல்லாவிடினும், சற்று தாமதமாக வேணும் பிரிவினையில்தான் முடியும். அவ்வாறு முடிவடைந்தால், பெண் வீட்டாரைத் தேற்றுவது எப்படி? என்ற பிரச்சினை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஏற்பட்டது. இதற்கு ஒரே மருந்து மைத்துனியாகிய ஜைனபுவை தான் மணந்து கொள்வது தான். ஆனால், வளர்ப்பு மகன் என்று பெயர் வாங்கிய ஜைதுப்னு ஹாரிதா (ரலி)யின் மனைவியாக இருப்பதால் நாட்டு வழக்கப்படி நடக்கக் கூடாத செயலாயிற்றே என்ற எண்ணம் அவர்கள் உள்ளத்தில் இருந்தது. இந்நிலையில் தான் விவாகரத்துச் சொல்ல வேண்டாம் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். என்றாலும் அவர்கள் எதிர்பார்த்தபடி விவாகரத்திலேயே முடிந்தது. இச்சந்தர்ப்பத்தில் அல்லாஹ்

فَلَمَّا قَضٰى زَيْدٌ مِّنْهَا وَطَرًا زَوَّجْنٰكَهَا لِكَيْلَا يَكُوْنَ عَلَى
الْمُؤْمِنِيْنَ حَرَجٌ فِىٓ اَزْوَاجِ اَدْعِيَآئِهِمْ اِذَا قَضَوْا مِنْهُنَّ وَطَرًا
وَكَانَ اَمْرُ اللّٰهِ مَفْعُوْلًا





பொருளடக்கம்

"ஜைது அவளை விவாகரத்துச் செய்துவிட்ட பின்னர் நாம் அவளை உமக்கு திருமணம் செய்துவைத்தோம். ஏனெனில், முஃமின்களால் (தத்தெடுத்து) வளர்க்கப்பட்டவர்கள், தம் மனைவியர்களை விவாகரத்துச் செய்துவிட்டால் அ(வர் வளர்த்த)வர்களை அப்பெண்ணை திருமணம் செய்து கொள்வதில் எந்தத் தடையும் இருக்கக் கூடாது என்பதற்காக (இது) நடைபெற்றே தீர வேண்டிய அல்லாஹ்வின் கட்டளையாகும். திருக்குர்ஆன் *(33:37)*

இத்தா முடிந்த பின்னர், ஜைதுப்னு ஹாரிதா (ரலி) அவர்களையே ஜைனபு (ரலி) அவர்களிடத்தில் தூது அனுப்பி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களுக்காக பெண் கேட்கச் செய்தார்கள். இவ்விஷயத்தில் இஸ்திகாரா செய்வதாக பதிலளிக்கப்பட்டது. பின்னர் சட்டப்படி திருமணம் நடைபெற்றது. இத்திருமணத்திற்குப் பின்னர் வலீமா விருந்து நிகழ்ந்தது. அச்சந்தர்ப்பத்தில் நபி(ஸல்) அவர்களின் துணைவியர்கள் திரைக்கு அப்பால் இருக்க வேண்டுமென்ற கட்டளை வஹீ மூலம் வந்தது. இதிலிருந்து தான் பர்தா வழக்கம் முஸ்லிம்களில் ஏற்பட்டது.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1859 காண்க.

இக்காலத்தில் விவாகரத்துச் சொல்லிவிட்டால் சம்பந்தப் புறத்தார் இருவரும் தலைமுறைக் கணக்கில் பகைமை கொள்வதும், எடுத்த காரியங்களிலெல்லாம் விரோதம் பாராட்டுவதும், ஊர் பொதுக்காரியங்கள், அரசியல், தேசியம், மத,





பொருளடக்கம்

சமூக விவகாரங்களில் கூட இப்பகை உணர்ச்சி வெளியாகும்படி செய்வதும் சிற்சில இடங்களில் வழக்கமாக இருக்கிறது. ஸஹாபிகளின் நிலை அவ்வாறில்லை. எந்தக் காரியத்தில் கருத்து வேற்றுமை ஏற்பட்டதோ அந்தக் காரியத்தில் மட்டும் தான் அவர்கள் ஒன்றுக்கொன்று எதிராக இருப்பர். அது நீங்கலாக மற்றைய காரியங்களில் ஒற்றுமையாகவும், நேசமாகவும் இருப்பர். இதற்கு அன்னை (ரலி) அவர்களின் முன்னாள் கணவர் ஜைதுப்னு ஹாரிதா (ரலி) என்பவரே பெண் பேசத் தூது சென்றது முன் உதாரணமாகும். கணவன் மனைவிகளுக்கிடையில் ஒற்றுமையில்லை; எனவே, இருவரும் திருமண உறவை முறித்துக் கொள்ள வேண்டியது தான். அவரவருக்கு வசதியான இடத்தில் இருவரும் மறு திருமணம் செய்து கொள்ள வேண்டியது தான் அல்லது அவரவர் வசதிப்படி நடந்து கொள்ள வேண்டியது தான். திருமண விலக்கேற்பட்டபின்னர் ஜைனபு (ரலி) அவர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்ததன் மூலம் அவர் விசுவாசிகளின் தாயானார். அன்னை (ரலி) அவர்களின் சகோதரி உம்மு ஹபீப் பின்து ஜஹ்ஷ் (ரலி) என்பவரை ஜைதுப்னு ஹாரிதா (ரலி) மணந்தார். இதன் மூலம் தம்பதிகளுக்கிடையில் சச்சரவின்றி ஒற்றுமை இருந்தது.

## கிறிஸ்தவர்களின் கற்பனை

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒருநாள் ஜைதுப்னு ஹாரிதா (ரலி)யின் வீட்டிற்குச் சென்றார். அங்கு அவர் இல்லை.





பொருளடக்கம்

ஜைனபு(ரலி)யின் அழகைப் பார்த்து ஆசை கொண்டார்கள். பின்னர் ஜைதை விவாகரத்துச் சொல்லும்படி செய்து, தாங்கள் மணந்து கொண்டார்கள். இது காதல் சூழ்ச்சி என்று கிறிஸ்தவர்கள் அன்று முதல் பிரச்சாரம் செய்கின்றனர். இதனைக் குறித்து முஸ்லிம் அறிஞர்கள் பதில் அளித்துக் கொண்டே இருக்கின்றனர். இதனை இங்கு கூற வேண்டிய அவசியம் இல்லை. கிறிஸ்தவர்களின் பிரச்சாரம் என்று முஸ்லிம்கள் உணர்வதால், அதனைக் குற்றமாக மதிக்க மாட்டார்கள். ஆயினும், முஸ்லிம்களிலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சரித்திரத்தைப் படிக்காதவர் களும், அரைகுறையாகப் படித்தவர் களும் இருக்கின்றனர். இவர்களிடத்தில் அவர்கள் பிரச்சாரம் செய்து தவறான எண்ணத்தை ஏற்படுத்தக்கூடும். எனவே, அவர்கள் விஷயத்தை சுருக்கமாக புரிந்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இந்த ஆட்சேபனைக்கு நம்முன்னோர்கள் அளித்த பதிலைத் தருகிறோம்.

அன்னை (ரலி) அவர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்யும்போது வயது 36. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வயது 57. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு 27 வயதுக்கு இளையவர். நபித்துவத்தை அடையும் போது 19 வயது பருவ மங்கையாக இருந்தார். அக்காலத்தில் பர்தா என்பது இல்லை. அத்துடன் அவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தந்தையுடன் பிறந்த மாமியின் புதல்வி. இருவரும் ஒற்றுமையாகப் பழகும் அக்காலத்தில்





பொருளடக்கம்

ஜைனபு (ரலி) அவர்களைப் பார்த்து காதலிக்காத நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 57 வயதை அதாவது வயோதிகப்பருவத்தை அடைந்த பின்னர், 36 வயதை அடைந்த ஒரு பெண்ணைப் பார்த்துக் காதல் கொண்டார் என்பது கற்பனையைத் தவிர வேறில்லை.

நல்ல இளைஞராக இருக்கையில், தமது செல்வாக்கை உபயோகித்து ஜைதுப்னு ஹாரிதா(ரலி)வுக்கு திருமணம் செய்து வைத்த நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் விரும்பி இருந்தால், தாங்களே திருமணம் செய்து கொண்டிருக்க இயலாதா? தவிர, அன்னை (ரலி) அவர்களை திருமணம் செய்த பின்னர் தானே பர்தா சட்டம் வந்தது. அதற்கு முன்னர் ஒரு தடவை கூட அவரைப் பார்க்காமலா இருந்தார்கள்? எனவே, கண்டதும் காதல் என்ற பிரச்சினை கற்பனையே யாகும்.

பின்னர், எதற்காக இதனை பெரிதுபடுத்து கிறார்கள்? அவர்களுடைய கற்பனைக் கொள் கையை இத்திருமணம் சிதறடிக்கிறது. பிதா, குமரன், பரிசுத்த ஆவி என்ற திரியோகத்துவத்தை இச்செயல் மூலம் ஒழித்துவிட்டது. தனக்குப் பிறக்காத ஒருவரை பெற்றோர்களின் சம்மதத்துடன் பிள்ளையாக அடைந்தாலும், அவர் பிள்ளையாகி விடமாட்டார். அவருடைய மனைவி, சொந்த மகனின் மனைவியைப் போன்று ஆகமாட்டாள் என்பதன் மூலம் ஹளரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை குமாரன் என்பதும், அல்லாஹ்வை பிதா என்பதும் பாமரர்களை ஏமாற்றும் வித்தையே. தவிர யதார்த்தமான பிதாவும் அல்ல யதார்த்தமான





பொருளடக்கம்

குமாரனும் அல்ல என்ற உண்மை இதன் மூலம் அம்பலப்படுத்தப்படுகிறது. எனவே, தங்கள் மதக் கொள்கையை தவிடு பொடியாக்குகிற இத்திருமணத் திற்கு விதவிதமாக காரணங்களைக் கற்பனை செய்யாவிடில், கிறிஸ்தவப் பொதுமக்களின் கேள்விக்குத் தக்க நியாயமான பதில் கூறி திரியோகத்துவக் கொள்கையை உறுதிப்படுத்த அவர்களால் இயலாது. எனவே, கற்பனைக் கதைகளை கண்டபடி கட்டிவிடுகின்றனர்.

## அன்னை (ரலி) அவர்களின் பெருமை

அன்னை (ரலி) அவர்களுக்கு நிகழ்ந்த இரு திருமணங்களும் இஸ்லாத்தின் போதனைகளைப் பரப்புவதிலும், மூட பழக்க வழக்கங்களை ஒழிப்பதிலும் நிரந்தரமான சாட்சிகளாக விளங்கு கின்றன. முதல் திருமணத்தால், பிறப்பால் மனிதனில் உயர்வு தாழ்வில்லை என்ற இஸ்லாமிய சித்தாந்தம் நிரந்தரமாயிற்று. அடிமை என்று விற்கப்பட்டவரும் விலைக்கு வாங்கப்பட்ட வருமான ஜைதுப்னு ஹாரிதா (ரலி) என்பவரை மணந்ததன் மூலம் அடிமை, விடுதலை, உரிமை பெற்றவன் என்று ஐரோப்பியர் அரபியர் ஏற்படுத்தி இருந்த பாகுபாடு முறியடிக்கப்பட்டது.

இரண்டாவது திருமணத்தால் வளர்ப்புப் புதல்வன் சொந்தப் புதல்வனல்ல. தத்தெடுப்பது இஸ்லாத்தில் அங்கீகரிக்கப்படவில்லை. இரண்டா வது திருமணத்திற்கு முன்னாள் கணவரே தூது சென்றது ஒரு காரியத்தில் கருத்து வேறுபாடு ஏற்பட்டால், அது அதில் மட்டும் தான் இருக்க வேண்டுமேயன்றி ஏனைய காரியங்களிலும் அதில்





பொருளடக்கம்

சம்பந்தப்பட்டவர்கள் அக்கருத்து வேறுபாட்டை தொடர்புபடுத்தக்கூடாது என்பதை காண்பிக்கிறது.

அவரது சகோதரியை ஜைது (ரலி) மீண்டும் மணந்தது அத்திருமணப் பிரிவினைக்கு உயர்வு தாழ்வு என்ற மனப்பான்மை காரணமல்ல என்பதைக் காட்டுகிறது.

தவிர, அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் மீது அவதூறு ஏற்பட்ட காலத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவிய கேள்விக்கு "என் செவியையும், பார்வையையும் காப்பாற்றிக் கொள்கிறேன். நல்லதைத் தவிர நான் அறியவில்லை" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அன்னை ஜைனபு (ரலி) அவர்கள் சாட்சியம் கூறியது அவரது நீதியையும், நேர்மையையும் நிதர்சனமாக்குகிறது.

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1142ல் காண்க.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவிற்குப் பின்னர் நீண்ட காலம் வாழாமல் விரைவிலேயே ஹிஜ்ரீ 20ம் வருடத்தில் ஹளரத் உமர் பாரூக் (ரலி) அவர்கள் காலத்தில் இவ்வுலகை விட்டுச் சென்றுவிட்டதால், ஹதீஸ் களை அறிவிக்கும் சந்தர்ப்பம் அவருக்குக் கிடைக்க வில்லை. ஏனெனில் ஹதீஸ்களை தன்னிச்சையாக அறிவிக்கக் கூடாது என்ற கட்டளை அரசால் அக்காலத்தில் கடுமையாக அமல் செய்யப்பட்டது. உம்மஹாத்துல் முஃமினீன்களுக்கு என்று நிர்ணயிக் கப்பட்ட உதவிப்பணத்தை கலீபா அவர்கள்





பொருளடக்கம்

அனுப்பி வைத்தார்கள். அதனை வாங்கித் தங்கள் குடும்பத்திலுள்ள ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, நாயனே, இதற்குப் பின்னர் உமரிடமிருந்து நான் பணம் வாங்க சந்தர்ப்பம் அளிக்காதே'' என பிரார்த்தித்தார். இந்த பிரார்த்தனை அங்கீகரிக்கப்பட்டது. மறு வருடப் பணம் வருவதற்குள் மறைந்துவிட்டார்.

அன்னை (ரலி) அவர்கள் தம் கையால் உழைத்துச் சம்பாதித்து, அதனை தர்மம் செய்வது வழக்கம். அன்னை (ரலி) அவர்களுக்கு **உம்முல் ஹக்கீம்** என்றொரு பெயருண்டு. அவருக்கு குழந்தை இல்லை. எனவே, அவருடைய விவேகத்தைக் கருதி இப்பெயர் ஏற்பட்டிருக்கக் கூடும்.

## உறவினர்கள்

அப்துல்லாஹிப்னு ஜஹ்ஷ் (ரலி): சகோதரராகிய இவர், ஆரம்பகால முஸ்லிம்களில் ஒருவர். அபிசீனியா, திருமதீனா ஆகிய இரண்டிடங்களுக்கும் ஹிஜ்ரத்துச் செய்தவர். ஹிஜ்ரீ 2ம் வருடத்தில் பன்னிரண்டு முஹாஜிர்களுக்கு தலைமை வகித்து திருமக்காவின் அருகிலுள்ள பனூநக்லா என்ற இடத்திற்கு உளவு பார்க்கச் சென்றார். அச்சமயத்தில் இவருக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'அமீருல் முஃமினீன்' என்ற பட்டத்தை வழங்கினார்கள். பின்னர் ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களுக்குப் பின்னர் கிலாபத் பதவியை ஏற்றுக்கொண்ட ஒவ்வொருவருக்கும் வழங்கப்பட்டது.

உஹதுப் போரில் இவர் ஷஹீதாகி, தம்முடைய மாமா ஸெய்யிதுஷ் ஷுஹதா ஹம்ஜா (ரலி)





பொருளடக்கம்

அவர்களுடன் அடக்கம் செய்யப்பட்டார். அங்கு போர் ஆரம்பமாவதற்கு முன்னர், ஸஃதுப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களை இவர் அழைத்து நாம் இருவரும் துஆச் செய்து நமது கோரிக்கைகளை அவனிடம் கேட்போம் என்றார். அதற்கவர் சம்மதித்தார்.

அவ்விருவரும் தனி இடத்திற்கு ஒதுங்கினர். முதலாவதாக ஸஃதுப்னு அபீ வக்காஸ் (ரலி) துஆ செய்தார். "நாயனே, நாளைய தினம் பகைவர்களை எதிர்க்கும்போது என்னுடைய போராட்டம் போரில் கடுமையானவருடன் ஏற்பட வேண்டும். போரும் கடுமையாக நிகழ வேண்டும். பின்னர் நான் வெற்றி பெற்று அவரைக் கொன்று அவருடைய போராட்டம் உனக்காகவே இருக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அப்துல்லாஹிப்னு ஜஹ்ஷ்(ரலி) ஆமீன் என்று கூறினார்.

பின்னர், அப்துல்லாஹிப்னு ஜஹ்ஷ் (ரலி) துஆச் செய்தார். "நாயனே, நாளையதினம் போரில் கடுமையானவருடன் எனது போர் ஏற்படவேண்டும். போரும் கடுமையாக நடைபெற வேண்டும். உனக்காக நான் போரிட வேண்டும். என்னுடன் அவர் செய்யும் போரில் என்னை அவர் கொன்று, என்னுடைய மூக்கு காதுகளைத் துண்டித்து அங்கஹீனம் செய்ய வேண்டும். உன்னை நான் சந்திக்கும் போது, அப்துல்லாஹ்வே, உனது செவிகளும், மூக்கும் எதற்காகத் துண்டிக்கப்பட்டன என்று என்னை நீ வினவவேண்டும். உனக்காகவும், உன் ரசூலுக்காகவும் (ஸல்) என்று நான் பதிலளிக்க வேண்டும். உண்மையுரைத்தாய் என்று நீ என் பதிலை அங்கீகரிக்க வேண்டும் என்று கூறினார்.





பொருளடக்கம்

நான் ஆமீன் என்றேன். என்னுடைய துஆவைப் பார்க்கினும் அப்துல்லாஹ்வின் துஆ சிறந்ததாக இருந்தது. அவர் பிரார்த்தித்தது போலவே அவர் ஷஹீதானார் என்று ஸஃதுப்னு அபீ வக்காஸ் (ரலி) அறிவித்துள்ளார்.

பனூ நக்லாவிற்கு அவரின் தலைமையில் சென்ற உளவுப் படை சங்கையான மாதத்தில் போரிட்டதாக அவர் மீது முஸ்லிம் அல்லாதார் குற்றம் சாட்டினர். இதனைப் பற்றிய விபரம் போர்கள் பற்றிய விளக்கத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

இக்குற்றச்சாட்டை அவர் ஏற்றுக் கொள்ள வில்லை. பகைவர்கள் தான் முதலாவதாகப் போரைத் தொடங்கினர் என்று கூறுகிறார். இதனைக் குறித்து அவர்,

تعدون قتلا في الحرام عظيمة    صدوكم عما يقول محمد

واعظم منه لو يرى الرشد ارشد    وكفر به والله راء وشاهد

وإخراجكم من مسجد الله أهله    فأنا وإن عير تقونا بقتله

لئلا يرى لله في البيت ساجد    وأرجف في الإسلام باغ وحاسد

سقينا من ابن الحضرمي رماحنا    بنخلة لما أوقد الحرب واقد

சங்கையான மாதத்தில் போரிடுவதை நீங்கள் பெரிதாக மதிக்கிறீர்கள். ஆனால், அறிவுள்ளோர் சிந்தித்தால், அதனைப் பார்க்கினும் பெரிதென உணர்வார்.

முஹம்மது கூறுவதைவிட்டு மக்களை நீங்கள்





பொருளடக்கம்

தடுக்கிறீர்கள். அவருக்கு மாறு செய்கிறீர்கள். அல்லாஹ் இதனைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

அவ்வாலயத்தில் அல்லாஹ்விற்காக ஸஜ்தா செய்பவரைப் பார்க்கக் கூடாது என்பதற்காக அல்லாஹ்வின் மஸ்ஜிதைவிட்டு அதற்குரியவர் களை நீங்கள் வெளியேற்றினீர்கள்.

அவரைக் கொன்றது பற்றி எங்களை நீங்கள் பழித்த போதினும், ஒவ்வொரு அக்கிரமக்காரனும் பொறாமைக்காரனும் இஸ்லாத்தைப் பற்றி (இப்படித் தான்) பிதற்றுகிறான்.

எனினும், உண்மை என்னவெனில் நக்லாவில் சண்டையை மூட்டியவன் சண்டையை மூட்டி விட்டான். பின்னர், இப்னு ஹள்ரமீ கொல்லப்படு வதன் மூலம் எங்களுடைய அம்புகளைக் குடிப் பாட்டினோம்'' என்ற கருத்துள்ள செய்யுள்களின் மூலம் சண்டையைத் தொடங்கியது முஸ்லிம் களல்ல. முஸ்லிம்கள் தற்காப்புத்தான் செய்தனர் என்று தெளிவாக்கியுள்ளார்.

அபூஅஹ்மத் (ரலி) மற்றொரு சகோதரர். இவர் புலவரும் கூட. கண் பார்வையற்றவர். அபிசீனியா விற்கும். திருமதீனாவிற்கும் ஹிஜ்ரத்துச் செய்தார். பனூ உமய்யா கோத்திரத்தைச் சேர்ந்த அபூசுப்யான்(ரலி) என்பவரின் புதல்வி பாரிஹா (ரலி) என்பவரை மணந்திருந்தார். ஹிஜ்ரீ 20ம் ஆண்டில் தம் சகோதரி அன்னை ஜைனபு (ரலி) அவர்களின் மறைவிற்குப் பின்னர் காலமானார்.

உபைதுல்லாஹிப்னு ஜஹ்ஷ் என்பவர் இஸ்லாத்தைத் தழுவி தம் சகோதரர்களுடன் சேர்ந்து அபிசீனியாவிற்கு ஹிஜ்ரத்துச் செய்தார். இவர் மது





பொருளடக்கம்

அருந்துபவராக இருந்ததால், அந்நாட்டில் குடிகாரர்களுடன் சேர்ந்து கிறிஸ்தவ மார்க்கத்தைத் தழுவி அங்கேயே மறைந்து விட்டார். இவர் அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்களின் முதல் கணவரும் ஆவார்.

உம்மு ஹபீப் பின்து ஜஹ்ஷ் (ரலி), அன்னை(ரலி) அவர்களின் சகோதரியான இவரின் இயற்பெயர் ஹபீபா என்பதாகும். ஜைதுப்னு ஹாரிதா (ரலி) என்பவரை மணந்தார்.

ஹம்னா பின்து ஜஹ்ஷ் (ரலி). ஹிஜ்ரத்திற்கு முன்னர் அன்ஸார்களுக்கு ஆசிரியராகச் சென்ற முஸ்அபுப்னு உமைர் (ரலி) என்பவரை மணந்தார். உஹதுப் போரில் அவர் ஷஹீதான பின்னர், தல்ஹத்துப்னு உபைதில்லாஹ் (ரலி) அவர்களை மறுமணம் செய்து முஹம்மது, இம்ரான் என்ற இரு புதல்வர்களுக்குத் தாயானார்.





பொருளடக்கம்

# அன்னை ஜுவைரிய்யா (ரலி)

இவரது இயற்பெயர் ஜுவைரிய்யா. தந்தையின் பெயர் ஹாரித். குஜாஆ கோத்திரத்தின் கிளையான பனூ முஸ்தலக் குடும்பத்துத் தலைவர். ஹிஜ்ரீ 5ம் வருடத்தில் இக்கோத்திரத்திற்கும், முஸ்லிம்களுக்குமிடையில் மிரீஸீஃ என்ற இடத்தில் நிகழ்ந்த போரில் இவர் கொல்லப்பட்டார். ஏராளமானவர்கள் கைதிகளாயினர். அவர்களில் அவரது புதல்வி ஜுவைரிய்யாவும் ஒருவர்.

தாபித்துப்னு கைஸிப்னி ஷுமாஸ் (ரலி) என்பவர் இவரைக் கைது செய்தார். இவருக்கு கத்தீபு (அல்லாஹ்வின் தூதரின் பிரசங்கி) என்றும் பெயர் கூறுவர். புகழ் பெற்றவனாக வாழ்ந்து ஷஹீதாக மரணமடைவாய் என்று இவரைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் காலத்தில் நிகழ்ந்த யமாமா போரில் ஷஹீதானார். இதில் முஸ்லிம்களின் அணி சீர்குலைந்தபோது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலத்தில் நாம் இவ்விதமாகப் போர் புரியவில்லை என்று வருத்தத்துடன் கூறி, தமது உடலில் மணம்பூசிக்கொண்டு மீண்டும் போரில் குதித்து, வீரதீரமாகப் போரிட்டு ஷஹீதானார். அப்பொழுது அவருக்கு வயது 28.

குறிப்பு : மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1194 காண்க.

ஜுவைரிய்யாவை அவர் கைது செய்ததால்

அவருக்கே அவர் பகிர்ந்தளிக்கப்பட்டார். என்றாலும், முக்காத்தப் என்னும் ஒப்பந்தத்தின் மூலம் அவர் விடுவிக்கப்பட்டார். (குறிப்பிட்ட ஒரு தொகையைக் கொடுத்துவிட்டு விடுதலையாகிக் கொள்ள வேண்டும் என அடிமையும் எஜமானும் செய்து கொள்ளும் ஒப்பந்தத்திற்கு முக்காத்தபா என்று பெயர்.)

ஜுவைரிய்யா வசீகரமான பெண். மதுரமான பேச்சுக்காரர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அவர் வந்து, தான் முஸ்லிம் என்றும், முஸ்தலக் கோத்திரத்துத் தலைவர் ஹாரிதின் புதல்வி என்றும், முக்காத்தபா செய்திருப்பதாகவும், தன் விடுதலைக்காக உதவி செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

அவரிடத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நீ கோரி வந்ததைப் பார்க்கினும் சிறந்ததை நான் செய்யட்டுமா? என்று வின வினார்கள். அது என்ன? என்று அவர் விசாரித்தார். நீ கோரி வந்த பணத்தை நானே கொடுத்து விடுதலை பெறச் செய்கிறேன். பின்னர் உன்னை திருமணம் செய்து கொள்கிறேன்'' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அதற்கவர் சம்மதித்தார். பணம் கொடுக்கப்பட்டது. திருமணம் நடந்தது.)

இச்செய்தி ஸஹாபிகளுக்குத் தெரிந்தவுடன் பனூ முஸ்தலக் கோத்திரத்தார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சம்பந்திகளாகி விட்டனர் என்று கூறி, தங்களிடம் அடிமைகளாக இருந்த அக்கோத்திரத்துக் கைதிகள் அனை வரையும் விடுதலை செய்து விட்டனர். இவ்விதமாக





பொருளடக்கம்

விடுதலை அடைந்தவர்கள் நூறு பேர்கள் என்றும் அதற்கும் அதிகமானவர்கள் என்றும் சொல்லப் பட்டிருக்கிறது.

இதனைக் குறித்து அன்னை ஆயிஷா ஸித்தீக்கா(ரலி) அவர்கள் "தன் சமூகத்தாருக்கு இவரைப் பார்க்கினும் அதிக பரக்கத்துள்ள பெண்ணை நான் பார்த்ததில்லை" என்று கூறி அவரை வாழ்த்தி னார்கள்.)

குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1108 காண்க.

முஸ்தலக் கோத்திரத்தைச் சேர்ந்த முஸாபி ஹுப்னு ஸப்வான் என்பவர் இவரை மணந்திருந்தார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரண்டாவதாகத் தான் மணந்தார்கள்.

ஒரு நாள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸுப்ஹு நேரத்தில் சென்றார்கள். அச்சமயம் அவர் முஸல்லாவில் (தொழுகை விரிப்பில்) இருந்தார். லுஹாவுடைய நேரத்தில் திரும்பவந்தார்கள் அப்பொழுதும் முஸல்லாவிலேயே அமர்ந்திருந்தார். அப்பொழு திருந்து இங்கேயே அமர்ந்திருக்கிறாயா? என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவினார்கள். "ஆம்" என்று பதிலளித்தார்கள். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "நான் இங்கிருந்து சென்ற பின்னர், நான்கு வார்த்தைகளைக் கூறினேன். அவற்றை உன்னு டைய அவ்ராதுகளுடன் எடைபோட்டால் அவை தான் பளுவாக இருக்கும்.





பொருளடக்கம்

سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهِ عَدَدَ خَلْقِهِ وَرَضٰى نَفْسِهِ وَزِنَةَ عَرْشِهِ وَمِدَادَ خَلْقِهِ.

(அவனுடைய வார்த்தைகளின்மை அளவிற்கும், அவனுடைய அர்ஷின் கன அளவிற்கும் அவனுடைய மனத்திருப்திக்கும் அவனுடைய படைகளின் எண்ணிக்கைக்குத் தக்கவாறு அவனுடைய புகழைக் கொண்டு அல்லாஹ் தூயவன்) என்பவை தான் அவ்வார்த்தைகள் என்று பணித்தார்கள்.

மற்றொரு நாள் வெள்ளிக்கிழமையன்று அன்னை (ரலி) நோன்பு நோற்றிருந்தார்கள். நீங்கள் நேற்றும் நோன்பு நோற்று இருந்தீர்களா? என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவினார்கள். ''இல்லை'' என்று பதிலளிக்கப் பட்டது. ''அவ்வாறாயின், நாளைக்கு நோன்பு நோற்கும் எண்ணமுண்டா?'' என்று மீண்டும் வினவினார்கள். ''இல்லை'' என்று பதிலளிக்கப் பட்டது. அவ்வாறாயின், இன்றைக்கும் நோன்பை விட்டுவிடு என்று கட்டளையிட்டார்கள். இவ்வுத்தரவிலிருந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெள்ளிக் கிழமை ஜும்ஆவின் தினத்தன்று மட்டும் ஒரு நோன்பு நோற்பதை விரும்பவில்லை என்று தெரிகிறது. இதனைக் குறித்து வெள்ளிக் கிழமைக்கு முன்னர் அல்லது பின்னர் நோன்பு நோற்றாலன்றி, அந்நாளில் (மட்டும்) உங்களில் எவரும் நோன்பு நோற்கக் கூடாது'' என்று பொதுக்கட்டளை விடுத்ததாக ஸஹீஹான கிரந்தங்களில் எழுதப்பட்டிருக்கிறது.





பொருளடக்கம்

## ரிவாயத்துகள்

ஸஹீஹுல் புகாரியில் இரண்டு, ஸஹீஹ் முஸ்லிமில் இரண்டு, ஏனைய கிரந்தங்களில் மூன்று ஆக ஏழு ஹதீஸ்களை அன்னை (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள். ஹிஜ்ரீ 56ம் வருடத்தில் அன்னை (ரலி) அவர்கள் மறைந்தார்கள். அப்பொழுது அவருக்கு வயது எழுபது என்றும் அறுபத்து ஐந்து என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

## உறவினர்கள்

அப்துல்லாஹ் இப்னு ஹாரித் (ரலி) என்பவர் அன்னை (ரலி) அவர்களின் சகோதரர். தன் கோத்திரத்துக் கைதிகளை விடுவிப்பதற்கான பேச்சுவார்த்தை நடத்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அவர் வந்தார். வரும்போது சில பெண் ஒட்டகையையும் ஒரு அடிமைப் பெண்ணையும் கொண்டு வந்து ஒரு மலைக்குகையில் மறைத்து வைத்துவிட்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து தம் கோரிக்கையை வெளியிட்டார்.

நஷ்டஈட்டிற்காக என்ன கொண்டு வந்திருக்கி றீர்கள்? என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவினார்கள். அதற்கவர் ''என்னிடம் ஒன்றுமில்லை'' என்று பதிலளித்தார். உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''நீர் மறைத்து வைத்துவிட்டு வந்த பெண் ஒட்டகைகளும் அடிமைப் பெண்ணும் என்ன வென்று வினவினார்கள். அவர் திகைத்து என்னுடன் வேறு யாரும் வரவில்லை. எனக்கு முன்னரும்





பொருளடக்கம்

வரவில்லை. அப்படி இருக்க இச்செய்தியை தாங்கள் கூறியது மெய்யான நபி என்பதற்கு அடையாளம் என்று கூறி அந்த இடத்திலேயே இஸ்லாத்தை தழுவினார்.

2. அம்ருப்னுல் ஹாரித் (ரலி) என்பவர் மற்றொரு சகோதரர்.

عن عمرو بن الحارث رضي الله تعالى عنه قال: مَا تَرَكَ رَسُوْلُ اللهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ عِنْدَ مَوْتِهِ دِرْهَمًا وَلاَ دِيْنَارًا وَلاَ عَبْدًا وَلاَ أَمَةً وَلاَ شَيْئًا إلاَّ بَغْلَتَهُ الْبَيْضَاءَ وَسِلاَحَهُ وَ أَرْضًا جَعَلَهَا صَدَقَةً. رواه البخاري

அல்லாஹ்வின் மீது பிரமாணமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் மரணத்தின் போது தீனாரையோ (தங்க நாணயத்தையோ), திர்ஹமையோ (வெள்ளி நாணயத்தையோ), அடிமையையோ, அடிமைப் பெண்ணையோ, வெள்ளைக் கோவேறு கழுதை யையும், ஆயுதங்களையும், ஒரு பூமியையும் தவிர வேறு எப்பொருட்களையும் விட்டுச் செல்ல வில்லை. அவர்கள் விட்டுச் சென்றதையும் தர்மமாக்கி விட்டார்' என்ற ஹதீஸை அறிவித்துள்ளார்.

3. உம்ரா பின்துல் ஹாரித் (ரலி) என்பவர் ஒரு சகோதரி.

اِنَّ الدُّنْيَا حَضِرَةٌ حُلْوَةٌ وَاِنَّ اللّٰهَ مُسْتَخْلِفُكُمْ فِيهَا اَلاَ فَاتَّقُوْا الدُّنْيَا وَاتَّقُوْا النِّسَاءَ ابن ماجة





பொருளடக்கம்

"இவ்வுலகம் பசுமையானது மதுரமானது" பார்ப்போரைப் பரவசப்படுத்தும். அல்லாஹ் உங்களை அதில் சாட்டிவிட்டு, நீங்கள் எப்படிச் செய்கிறீர்கள் என்பதைப் பார்க்கிறான்" என்ற ஹதீஸை இவர் அறிவித்துள்ளார்.



# அன்னை ஸபிய்யா (ரலி)

இவர் ஸெய்யிதுனா ஹாரூன் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் வம்சத்தில் தோன்றிய ஹுய்யுப்னு அக்தப் என்ற யூதத் தலைவரின் புதல்வியாவார். இவருடைய தாயாரின் பெயர் பர்ரா பின்து ஸமுஆல் என்பதாகும்.

இவரது முதல் திருமணம் ஸலாமுப்னு முஷ்க்கம் என்பவருடன் நடந்தது. பின்னர் இரண்டாவதாக கினானத்துப்னு அபில் ஹுக்கைக் என்பவர் மணந்தார். அவர் கைபர் போரில் கொல்லப்பட்டார். ஸபிய்யா போர்க் கைதியாகப் பிடிக்கப்பட்டார். தஹிய்யத்துப்னு கலீபத்தல் கல்பீ (ரலி) தமக்கு ஒரு அடிமைப் பெண் வேண்டுமென நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வேண்டினார். போரில் கைது செய்யப்பட்ட பெண்களில் ஒருவரை எடுத்துக்கொள்ளும் படி அவருக்குக் கட்டளை யிட்டார்கள்.

அவர் ஸபிய்யாவை எடுக்க விரும்பினார். இதர





பொருளடக்கம்

ஸஹாபிகள் அதற்கிணங்காமல் "ஸபிய்யா யூதத் தலைவரான ஹுய்யுப்னு அக்தபின் புதல்வியும் மற்றொரு தலைவரான கினானாவின் மனைவியு மாவார். திஹ்யாவிற்கு அவர் தகுதியல்ல. தங்களுக்குத்தான் பொருத்தமானவர்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கூறினர். எனவே, அவருக்கு வேறொரு அடிமைப் பெண்ணைக் கொடுத்து விட்டு ஸபிய்யாவிற்கு விடுதலை அளித்து திருமணமும் செய்து கொண்டார்கள். விடுதலை பெறுவதற்கு முன்னரே அவர் இஸ்லாத்தை தழுவிவிட்டார்.

ஒரு நாள் அன்னை (ரலி) அவர்கள் அழுது கொண்டிருந்தார். ஏன் அழுகிறாய்? என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவினார்கள். ஹப்ஸா என்னை அற்பமாகக் கருதுகிறார். தாங்கள் தந்தை வழி உறவினர் என்று தன்னைப் பற்றி பெருமையாகப் பேசுகிறார் என்று கேள்விப்பட்டேன் என்று கூறினார். அதற்கவர்கள் "என் தந்தை ஹாரூன் அலைஹிஸ்ஸலாம். என் சிறிய தந்தை மூஸா அலைஹிஸ்ஸலாம். என் கணவர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள். இந்நிலையில் என்னைப் பார்க்கினும் நீங்கள் எப்படி உயர்ந்தவர்களாக இருக்க முடியும் என்று நீ அவர்களை வினவக் கூடாதா? என்று கூறித் தேற்றினார்கள்.)

ஒருமுறை அன்னை (ரலி) அவர்களின் அடிமைப் பெண் ஒருத்தி கலீபா உமர் பாரூக் (ரலி) அவர்களிடம் சென்று, ஸபிய்யா (ரலி) சனிக் கிழமையைக் கொண்டாடுகின்றார். யூதர்களுக்கு அன்பளிப்புகளை வழங்குகிறார் என்று முறையிட்





பொருளடக்கம்

டாள். இதனைக் குறித்து கலீபா அவர்கள் விசாரணை புரிந்தபோது, எனக்கு அல்லாஹ் ஜும்ஆவைத் தந்த பின்னர் சனிக்கிழமையை நான் விரும்பவில்லை. யூதர்களிடத்தில் எனக்கு உறவு இருக்கிறது. எனவே, அவர்களுக்கு நான் கொடுப்பது உண்மைதான் என்று பதிலளித்தார். அத்துடன் அவ்விவகாரம் முடிவுற்றது.

பின்னர், அந்த அடிமைப் பெண்ணை அன்னை (ரலி) அவர்கள் அழைத்து, நீ ஏன் கலீபா அவர்களிடம் முறையிட்டாய்? என்று வினவினார் கள். என்னை ஷைத்தான் வழி தவறச் செய்து விட்டான் என்று பதிலளித்தார். உடனே அன்னை (ரலி) அவர்கள் அவளுக்கு விடுதலையளித்து விட்டார்கள். ஹிஜ்ரீ 50ம் வருடத்தில் அன்னை (ரலி) இவ்வுலகை விட்டகன்றார்கள்.

## அறிவிப்புகள்

புகாரி முஸ்லிம் ஆகிய இரண்டிலும் ஏகமனதாக எழுதப்பட்டது ஒன்று. இதர கிரந்தங்களில் எழுதப்பட்டு இருப்பவை ஒன்பது. ஆக மொத்தம் பத்து ஹதீஸ்கள்.

இவருடைய தாய்மாமாவான ரிபா அத்துப்னு ஸமூஆல் (ரலி) என்பவர் ஒரு ஸஹாபி. இவருடைய ஹதீஸ்கள் இமாம் மாலிக் (ரஹ்) அவர்களால் தொகுக்கப்பட்ட முஅத்தா என்ற கிரந்தத்தில் எழுதப்பட்டிருக்கிறது.





பொருளடக்கம்

# அன்னை மைமூனா (ரலி)

அன்னை (ரலி) அவர்களின் தந்தை ஹாரிதுப்னு ஹஸ்ன் என்பவராவார். முளர் கோத்திரத்தைச் சேர்ந்தவர். அபூ ரஹ்மிப்னு அப்தில் உஸ்ஸா என்பவர் திருமணம் செய்திருந்தார். அதற்கு முன்னர் ஹுவைத்திபுப்னு அப்தில் உஸ்ஸா என்பவர் மணந்திருந்தார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உம்ரத்துல் களாவிற்கு வந்தபோது இவர் விதவையாக இருந்தார். இவரைக் குறித்து ஸெய்யிதுனா அப்பாஸுப்னு அப்தில் முத்தலிப் (ரலி) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பரிந்துரைத்ததின் காரணமாக இவரை திருமணம் செய்தார்கள்.

*குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 862, 1611 காண்க.*

## உறவினர்கள்

சகோதரி உம்முல் பள்ல் லுபாபத்துல் குப்ரா (ரலி), ஸெய்யிதுனா அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு மனைவியும், தப்ஸீர்களுக்கு இமாமாகிய இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்குத் தாயாருமாவார்.

சகோதரி லுபாபத்துஸ் ஸுக்ரா. இவர் காலிதுப்னுல் வலீத் (ரலி) அவர்களின் தாயார் ஆவார்.

**அஸ்மாஉ:** இவர் உபய்யுப்னு கலப் என்பவரின் மனைவியாவார்.





பொருளடக்கம்

இஸ்ஸா: இவர் ஸியாதுப்னு அப்தில்லா ஹிப்னி மாலிக்கில் ஹிலாலின் மனைவியாவார்.

இந்நால்வரும் அன்னை (ரலி) அவர்களின் உடன் பிறந்த சகோதரிகள். இவருடைய தாய் வயிற்றில் பிறந்த சகோதரிகள் வருமாறு:

**அஸ்மா பின்து அமீஸ் (ரலி):** இவர் ஜஃபர் தையார் (ரலி) அவர்களின் மனைவி. அப்துல்லாஹ் அவ்ன், முஹம்மது ஆகமூன்று புதல்வர்கள் பிறந்தனர்.

ஜஃபர் தையார் (ரலி) ஷஹீதான பின்னர் ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களை மணந்து முஹம்மதுப்னு அபீபக்கர் (ரலி) என்பவரைப் பெற்றார். ஸித்தீக் (ரலி) அவர்களின் மறைவிற்குப் பின்னர் ஹளரத் அலீ (ரலி) அவர்களை மணந்து யஹ்யா (ரலி) என்பவரைப் பெற்றார்.

ஸல்மா பின்து அமீஸ் (ரலி). இவர் ஸெய்யிதுஷ் ஷுஹதா ஹம்ஜா (ரலி) அவர்களை மணந்து அமத்துல்லாஹ் என்னும் பெண் குழந்தையைப் பெற்றார். அவர் உஹதுப் போரில் ஷஹீதான பின்னர் ஷத்தாதுப்னு உஸாமத்துல் ஹாதீ (ரலி) என்பவரை மணந்து அப்துல்லாஹ் அப்துர்ரஹ்மான் என்ற இரு புதல்வர்களுக்குத் தாயானார்.

ஸலமா பின்து ஆமீஸ் (ரலி): இவர் அப்துல்லா ஹிப்னு கஃபிப்னில் கஷ்அமீ (ரலி) என்பவரை மணந்தார்.

உம்முல் முஃமினீன் ஜைனபு பின்து குஜைமா(ரலி). இவர் உம்மஹாத்துல் முஃமினீன்களில் ஒருவர். இவரது வாழ்க்கை வரலாறு மேலே எழுதப்பட்டிருக்கிறது.





பொருளடக்கம்

புகாரி, முஸ்லிம் ஆகிய இரண்டு கிரந்தங் களும் ஏகமனதாக எழுதியவை ஏழு. ஸஹீஹுல் புகாரியில் மட்டும் ஒன்று. ஸஹீஹ் முஸ்லிமில் மட்டும் ஒன்று. இதர நூல்களில் அறுபத்தேழு. ஆக மொத்தம் எழுபத்தாறு ஹதீஸ்கள் இவரால் அறிவிக்கப் பட்டிருக்கின்றன.

அன்னை (ரலி) அவர்களைப் பற்றி மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் மூன்றாம் பாகம் உம்ரத்துல் களாவின் விபரத்திலும் காணலாம்.

# பலதார மணம்

இஸ்லாத்தைக் குறித்து எதிர்மத வாதிகள் செய்யும் எதிர்ப்புகளில் பலதார மணமும் ஒன்று. இதில் முன்னணியில் இருப்பவர்கள் மேல்நாட்டினர் (ஐரோப்பியர்) தான். ஐரோப்பாவில் ஏற்பட்ட சுதந்திரப்போரில் ஆடவர்கள் தோல்வியடைந்து, பெண்களுக்குப் பணிந்தனர். அவர்கள் கேட்ட சுதந்திரங்களை அளித்து, அவர்கள் மீது அன்போ பாசமோ அற்றவர்களாக ஒதுக்கிவிட்டனர்.

பெண்கள் எங்கு சென்றாலும் என்ன செய்தாலும் அவர்களைக் கண்டிக்கவோ தடை செய்யவோ கூடாது. அவரவருக்கு விருப்பப்பட்ட ஆடவரை அவர்கள் தேர்ந்தெடுத்து மணந்துகொள்ளலாம். அவர்கள் சுயமாகச் சம்பாதித்து தங்கள் மனம்போல் செலவு செய்யலாம் என்றெல்லாம் ஐரோப்பியர்கள்





பொருளடக்கம்

சட்டமியற்றி செயல்படுத்தி வருகின்றனர். ஒரு ஆடவனுக்கு ஒரு மனைவி என்பதும் அவர்கள் இயற்றிய சட்டங்களில் ஒன்று.

இவற்றின் காரணமாக பருவப் பெண்கள் பல ஆடவர்களிடம் நட்புக் கொண்டு ஏமாற்ற மடைந்து கற்பை இழந்து பல சிரமங்களுக்குப் பிறகு ஒரு ஆடவரை மணக்கின்றனர். சுருங்கக் கூறின் பருவப் பெண்களும் ஆண்களும் பலருடன் சேர்ந்து இன்பம் நுகர்ந்த பின்னரே திருமணம் செய்து கொள்கின் றனர். பெற்றோர்கள் அதிகாரத்தோரணையில் கண்டிக்கவோ தடுக்கவோ முடியாது. ஆனால், ஆலோசனை கூறலாம். இதனால், எத்தனையோ பெண்கள் தங்கள் வாழ் நாள் முழுவதும் திருமணமின்றி வாழ்கின்றனர். தாங்களாகவே கணவனைத் தேடிக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்த நிலைக்குப் பெண்கள் வந்துவிட்டதால் அமெரிக்க - ஐரோப்பாவிலுள்ள பெரும்பாலான பெண்கள் கற்பை இழந்த பின்னர் தான் கணவரை அடைகின்றனர். எனவே, அந்நாடுகளில் விபச்சார வாசல்கள் திறந்து விடப்பட்டிருக்கின்றன.

ஒருத்திக்கு ஒருவன் என்ற சட்டப்படி திருமணம் நடைபெறுவதால் பல இடங்களிலும் நாடுகளிலும் அதிகமாக உள்ள பெண்கள் தவறான முறையில் தான் தங்கள் சரீர இச்சைகளைத் தனித்துக் கொள்கின்றனர். இந்நிலையில் உள்ள வர்கள் இஸ்லாத்தைக் குறித்து எதிர்ப்பு தெரிவிப்பது ஆச்சரியமாகும்.

பலதாரமணம் கூடாது என்பது முற்கால மதங்களில் உள்ளதா? அல்லது அக்காலத்தில்





பொருளடக்கம்

வாழ்ந்த சமூகங்கள் ஏற்படுத்திக் கொண்ட பழக்க வழக்கமா? என்பதை நாம் சிந்திப்பின் இது மதத்திலுமில்லை, சமூகத்திலுமில்லை என்றே தெரிகிறது.

உலகில் பிரபலமாக இருந்து வருகிற யூத கிறிஸ்தவ மதங்களில் எதுவும் இச்சட்டத்தை இயற்றவில்லை. யூதர்களும் கிறிஸ்தவர்களும் கௌரவிக்கிற முற்காலத்து நபிமார்களில் பிரபல மானவர்கள் அனைரும் ஒன்றுக்கும் மேற்பட்ட பெண்களுக்கு கணவர்களாகவே இருந்திருக்கின் றனர். ஹளரத் ஆதம் (அலை) அவர்கள் முதல் ஹளரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வரையில் தோன்றிய முற்காலத்து நபிமார்கள் ஒரு மனைவியுடன் மட்டும் தான் வாழ்ந்தார்கள் என்பதையோ அவர்களுக்கும் பலதாரங்கள் இருந்தன என்பதையோ உறுதியாகச் சொல்ல முடியவில்லை.

மனித உற்பத்தியின் ஆரம்ப காலமாக இருந்ததால், எண்ணிக்கையில் ஆண்கள் அதிகமா? பெண்கள் அதிகமா? என்ற சர்ச்சையோ சட்டமோ ஏற்பட்டதாகத் தெரியவில்லை. அக்காலம் சரித்திர காலத்திற்கு முந்தியதாக இருப்பதால், சரித்திரப் பூர்வமான ஆதாரங்களைக் கொண்டு எதையும் உறுதிப்படுத்த இயலாது.

ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் காலத்திலிருந்து ஹளரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வரையிலுள்ள காலத்தை நடுவிலுள்ள காலமாகக் கொள்வோம். இது சரித்திர காலத்திற்குட் பட்டது. இக்காலத்தில் வாழ்ந்த நபிமார்களையும் சமூகங்களையும் பற்றி யூத கிறிஸ்தவ சகோதரர்கள்

போற்றுகிற விவலிய நூல்களில் ஏராளமான விளக்கங்கள் கிடைக்கின்றன.

ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மூவர் மனைவியர் என்று பைபிள் பழைய ஏற்பாடு கூறுகிறது. ஸாரா (ரலி), ஹாஜரா (ரலி) கத்தூரா (கேத்தூராாள்) இம்மூவருக்கும் குழந்தைகளிருந்தனர் என்பது தெரியவருகிறது.

அவருடைய பேரரான ஹளரத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நான்கு மனைவி யருக்குக் கணவராக இருந்திருக்கிறார். அவர்களிலி ருந்து பன்னிரண்டு புதல்வர்களுக்கு அவர் தந்தை யானார்.

ஹளரத் மூஸா அலைஹி வஸல்லம் அவர்களைப் போல் இஸ்ரவேலரில் ஒரு நபியும் அவருக்குப் பின்னர் தோன்றியதில்லை என்று பைபிள் பழைய ஏற்பாடு, உபாகமம் கூறுகிறது. இவருக்கும் கூட நான்கு மனைவியர் இருந்ததாக அதே பழைய ஏற்பாடு கூறுகிறது.

ஹளரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஒன்பது மனைவியரும் பத்து அடிமைப் பெண்களும் இருந்தனர். இவர்களைத் தவிர வேறு மனைவியரும் இருந்ததாக பைபிள் கூறுகிறது. தொண்ணூற்றொன்பது மனைவியர் இருந்ததாக முஸ்லிம்கள் கூறுகின்றனர்.

ஹளரத் சுலைமான் (அலை) அவர்களுக்கு எழுநூறு மனைவியரும் முன்னூறு அடிமைப் பெண்களும் இருந்ததாக முஸ்லிம்கள் கூறுகின்றனர்.

மேலே கூறப்பட்ட நபிமார்களை முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும், யூதர்களும் கௌரவிக்கின்றனர்.

இவர்கள் யாவரும் பரிசுத்தவான்கள் என்பது அவர்களின் நம்பிக்கை. இவர்கள் பலதாரங்கள் உள்ளவர்களாக இருந்தனர் என்பதை மேல் நாட்டினரோ யூத கிறிஸ்தவ மதத்தினரோ குறை கூறவில்லை. இந்நிலையில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பலதாரமணம் செய்தார்கள் என்பதற்காக அவர்களைக் குறை கூறுவது நியாயந்தானா? என்பதை மேல் நாட்டினரும் வேதக் காரர்களும் சிந்திப்பார்களாக.

இந்தியாவிலுள்ள ஹிந்துக்களை எடுத்துக் கொள்வோம். தங்களுடைய புனித புராணமாக அவர்கள் கருதுகிற இராமாயணம் பாரதம் போன்ற நூல்களைப் படியுங்கள். கடவுள் அவதாரமென ஹிந்துக்கள் நம்புகிற ராமருடைய தந்தை தசரத சக்கிரவர்த்திக்கு மூன்று மனைவியர். ஸ்ரீ கிருஷ்ண பகவான் என்பவருக்கும் பல மனைவியர். பாண்டு மகாராஜாவிற்கு இரண்டு மனைவியர். சந்தன மகாராஜாவிற்கு இரு மனைவியர். இவர்களை யாரும் குறை கூறவில்லை.

மத கிரந்தங்களில் கூறப்பட்ட இவர்களை அந்தந்த மதத்தினர் எதிர்க்கவில்லை. அக்காலத்தில் பலதாரமணம் செய்வது சட்டப்படி செல்லத்தக்க தாகவே இருந்தது. பலதாரமணம் கூடாதென்று அக்காலத்து மதச் சட்டமோ சமூகச் சட்டமோ தடுத்து இருந்தால், இவர்கள் சட்டத்தை மீறி திருமணம் செய்து இருக்கமாட்டார்கள். சட்டவிரோதமாக நடப்பவரை ஹிந்துக்களோ கிறிஸ்தவரோ யூதரோ மதிக்கவுமாட்டார்கள். எனவே, முற்காலத்து வேதங்களும் சமூகங்களும் அங்கீகரித்து ஏற்றுக் கொண்ட ஒன்றுதான் பலதாரமணம்.





பொருளடக்கம்

# பலதாரமணத்தால் பாதகமா?

இஸ்லாமிய சன்மார்க்கம் குறிப்பிட்ட வர்க்கத் திற்கோ சமூகத்திற்கோ காலத்திற்கோ அருளப்பட்ட தல்ல. அது சம்பூரண மார்க்கமாக இருப்பதால், எல்லா வர்க்கங்களுக்கும் சமூகங்களுக்கும் காலங்களுக்கும் ஏற்றதாகும்.

فَانْكِحُوْا مَاطَابَ لَكُمْ مِّنَ النِّسَآءِ مَثْنٰى وَثُلٰثَ وَرُبٰعَ فَاِنْ خِفْتُمْ اَلَّا تَعْدِلُوْا فَوَاحِدَةً اَوْمَا مَلَكَتْ اَيْمَانُكُمْ ذٰلِكَ اَدْنٰى اَلَّا تَعُوْلُوْا

''பெண்களிலிருந்து உங்களுக்கு மணமான (பிடித்தமான) வரை இரண்டிரண்டாக மும்மூன்றாக, நன்னான்காக திருமணம் செய்து கொள்ளுங்கள். ஆனால், (உங்கள் மனைவியருக்குள்) நீங்கள் நீதி செய்யமாட்டீர்கள் என்று பயந்தீர்களானால் ஒருத்தியை அல்லது உங்களது வலக்கரங்கள் சுதந்தரித்துக் கொண்டதை (போதுமாக்கிக் கொள்ளுங்கள்). இது நீங்கள் அநியாயம் செய்யாதிருப்பதற்கு மிகவும் நெருங்கியதாக இருக்கிறது என்று கூறியுள்ளான். அல்குர்ஆன் (4:3)

இவ்வசனத்தில் பல மனைவியரை மணந்து கொள்ள வேண்டும் என்று எவரையும் கட்டாயப்படுத்தவில்லை. இரண்டு, மூன்று, நான்கு மனைவியருடன் வாழ ஆடவருக்கு உரிமை கொடுப்பதைத் தவிர இச்சட்டத்தில் வேறில்லை. ஒன்றுக்கும் மேற்பட்ட மனைவிய ருக்கு கணவராக





பொருளடக்கம்

இல்லாதவர் குற்றவாளி எனத் தீர்மானிக்கவு மில்லை. பலதார மணம் தான் செய்ய வேண்டும் எனக் கட்டளையிட்டு ஒன்றுக்கும் மேற்பட்ட பெண்களுடன் தான் வாழ வேண்டும் என ஆடவர்களை நிர்ப்பந்தித்து இருந்தால் அதனைக் குறை கூறிடின் அது கவனிக்கத்தக்க அம்சமாக இருந்திருக்கும். அவசியப்படும் போது, தேவைப் படும் போது நான்கு பேர்கள் வரையில் திருமணம் செய்து கொள்ள அனுமதி தான் வழங்கப்பட்டிருக் கிறது.

மேல் நாட்டினர் (ஐரோப்பியர்) ஏற்படுத்திய ஏகதாரச் சட்டம் இக்காலத்து நிலைக்கு அதினும் மேனாட்டின் நிலைக்கு உகந்ததாக இருக்கலாம். இச்சட்டத்தை மேல் நாட்டினர் (ஐரோப்பியர்) இயற்றிய காலத்தில் அங்கு ஆண்களும் பெண்களும் சம எண்ணிக்கையில் இருந்திருக்க லாம் அல்லது ஆண்களை விட பெண்கள் எண்ணிக்கையில் குறைவாக இருந்திருக்கலாம்.

மேல் நாட்டினர் (ஐரோப்பியர்) கூடிவாழும் எண்ணம் உள்ளவர்கள் அல்லர். மனித வர்க்கத்தின் மீது இரக்கம் உள்ளவர்களும் அல்லர். இருபதாம் நூற்றாண்டு பிறந்த பின்னர் இங்கிலாந்து தென்ஆப்பிரிக்காவில் போயர் போரைத் தொடங் கிற்று. ரஷ்ய ஜப்பான் போர், இத்தாலி திருப்போலிப் போர், பால்கன் போர், முதல் உலகப் போர், இத்தாலி அபிசீனிய போர், இங்கிலாந்து அயர்லாந்து போர், இரண்டாவது உலகப் போர் இவை மட்டுமென்ன இன்னும் எத்தனையோ விதமான ரத்தம் சிந்துதலை ஐரோப்பா தோற்றுவித்திருக்கிறது. இவை யாவற்றிலும் போர்க்களத்தில் ஆயுதமேந்திச்





பொருளடக்கம்

சென்றவர்கள் ஆடவர்கள் தான். இரு கட்சிகளிலும் கோடிக்கணக்கான ஆடவர்கள் கொல்லப்பட்டனர். இதனால் ஆண், பெண் விகிதத்தில் பெருத்த மாறுதல்கள் ஏற்பட்டன. போர்க்களத்தில் கொல்லப் பட்ட வீரர்களின் மனைவியரும் பரிதவித்தனர். இதனால் விபச்சாரப் புதல்வர்கள் தோன்றினர். இவர்களின் பிரச்சினைக்குத் தீர்வு காண்பது சில அரசாங்கங்களுக்குத் தலைவலியாக இருந்தது.

இவற்றை உணர்ந்து ஐரோப்பியர்கள் Masque of Nation சர்வதேசச் சங்கம் என்று ஒரு சபையை முதல் உலகப் போரின் முடிவில் தோற்று வித்தனர். போர் வராமல் தடுத்து சமாதானத்தை ஏற்படுத்துவதுதான் இச்சபையின் முக்கிய நோக்கம். ஆயுதங்களைப் பெருக்கி போருக்கு தயாராகும் வரையில் இச்சபை ஒழுங்காக நடந்தது. வல்லரசு களிடம் போதுமான அளவு போர்க்கருவிகள் தயாரானவுடன் சபையை புறக்கணித்து விட்டு போரில் இறங்கிவிட்டனர். சபை இருந்த இடம் தெரியாமல் மறைந்தது.

இரண்டாம் உலகப் போர் முடிவில் அதே நோக்கத்துடன் ஐக்கிய நாடுகள் சபை* என்ற பெயரால் புதுச் சபை தோற்றுவிக்கப்பட்டது. இச்சபையின் நிலையும் பழைய சபையின் நிலையை ஒத்தே இருக்கிறது. எச்சமயத்தில் இதையும் இல்லாமல் செய்வரோ? எனவே, சமூகங்களுக்கும் நாடுகளுக்குமிடையில் போர்

---

*ஆசிரியர் அவர்களால் இந்நூல் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்டது. ஐ.நா. சபையின் நிலையையும், அணு ஆயுதம் தொடர்பாக மேலை நாட்டினர் மற்ற நாடுகளை எப்படி நிர்ப்பந்திக்கின்றனர் என்பதையும் வாசகர்கள் அறிவர். (S.S.M. முஹம்மது ஜாபர்)





பொருளடக்கம்

மூழ்வதைத் தடுக்க முடியவில்லை. போர் மூண்டால் ஆடவர்கள் தான் அதிகமாக உயிரிழப்பர். எனவே, ஆடவர்களின் எண்ணிக்கையில் திடீர் மாற்றம் ஏற்படுவதற்கு போர் போன்ற எத்தனையோ காரணங்களிருக்கின்றன.

படைத்தவனான அல்லாஹ் இவ்வுலகில் நிகழ்ந்தவற்றையும் நிகழ்வனவற்றையும், நிகழப் போவனவற்றையும் அவற்றின் விளைவுகளையும், அவற்றிற்குள்ள பரிகாரங்களையும் நன்கு அறிந் தவன். எனவே, மனித வர்க்கத்திற்கு நிகழப்போகிற விஷயங்களுக்குத் தக்க பரிகாரத்தை தன் வேதத்தில் கூறியுள்ளான்.

அடுத்த நிமிடத்தில் தனக்கு நிகழப்போகிற சம்பவம் என்னவென்பதைக் கூட உணர இயலாத மனிதர்களில் சிலர் ஒன்று கூடி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி அதுதான் நேர்மை நிரந்தரமானது என்று வாதிப்பது மதியீனமேயாகும். மேலும் மனிதர் செய்த தீர்மானங்களில் எதுவும் இன்றுவரையில் நிரந்தரமாக இருந்ததில்லை. ஒரு நாட்டுக்கு உகந்ததாகக் கருதப்படுகிறது ஒரு தீர்மானம் வேறொரு நாட்டிற்கு விரோதமாக இருப்பதை யும், ஒரு நாட்டில் இருக்கிற நிலையைக் கருதிச் செய்யப்பட்ட நேர்மையான தீர்மானம் சில காலத்திற்குப் பின்னர் அதே நாட்டிற்குத் தீங்காக இருப்பதையும் நாம் காண்கிறோம்.

உலகிலுள்ள பாராளுமன்றங்கள் சட்டங்கள், திருத்தங்கள் என்று ஒன்றுக்கொன்று முரண்பட்டவைகளை நிறை வேற்றுவதையும் காண்கிறோம். எனவே, மனிதன் தனிப்பட்ட முறையில் தனக்கு நிகழ்வதையும் கூட்டு முறையில்





பொருளடக்கம்

சமூகத்திற்கோ நாட்டிற்கோ நிகழ்வதையும் உணர்ந்து அதற்கேற்ப சட்டத்தை இயற்ற முடியாமல் இருக்கையில் இறைச்சட்டத்தில் திருத்தம் சொல்ல முன்வருவது அறிவுடமையாகாது. எனவே, பலதார மணத்தைப் பற்றி மற்றவர்கள் கூறும் குறைகள் பற்றிய விளக்கத்தை இத்துடன் நிறுத்திவிட்டு அவர்கள் இயற்றிய ஒருவனுக்கு ஒருத்தி என்ற சட்டத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.





பொருளடக்கம்

# ஏகதார மணம் இதம் தருமா?

ஒருவரின் மனைவி நிரந்தரமான நோய்க்கு ஆளாகிறாள். அவளுக்கு சுயமாக நடமாடக் கூட இயலாது என்று வைத்துக்கொள்வோம். அவளுடைய கணவன் அவளைத் தீண்டவோ அவளிடமிருந்து இன்பம் பெறவோ இயலாத நிலையில் அவள் இருக்கும்போது அவளைக் கணவன் விவாகரத்துச் சொல்வதா? அல்லது அவளுக்காகவே திருமணம் செய்யாமல் இருப்பதா?

அவளை விவாகரத்துச் சொல்வது மனித தர்மமாகாது. ஏனெனில் கூடிவாழத்தான் பெண், ஆண் தோன்றினரேயன்றி இன்பம் நுகர மட்டுமல்ல. ஒரு ஆணும், ஒரு பெண்ணும் மண வாழ்க்கையில் ஈடுபட்ட பின்னர், எதிர்பாராமல் ஏற்படுகிற நோய், பிணி முதலிய காரணங்களுக்காக ஆணைப் பெண்ணும், பெண்ணை ஆணும் கைவிடுவதும், நம்பியவரைப் பரிதவிக்கச் செய்வதும் நேர்மையாகுமோ? என்பதை உத்தேசித்து விவாகரத்துச் சொல்லாமல் இருந்தால், நோயாளியான அந்தப் பெண்ணையும் தன்னையும் கவனிக்க வேறு ஒரு மங்கையை மணக்கக் கூடாது என்று சட்டம் தடை செய்தால் அச்சட்டம் மனித வர்க்கத்திற்கு நன்மை செய்கிறதா அல்லது தீமை செய்கிறதா என்பதைச் சிந்திக்க வேண்டும்.

இச்சந்தர்ப்பத்தில் நோயாளியான மனைவி இருக்கையிலேயே இணையாள் ஒருத்தியை இணைத்துக் கொள்ள வேண்டாம் என்பது விவேகமாகுமா?





பொருளடக்கம்

இதுபோல ஒரு பெண் மலடியாக இருக்கிறாள். அவளுடைய கணவன் தனக்கு சந்ததி வேண்டு மென்று விழைகிறான். இந்நிலையில் மலடியைக் கைவிட்டு விட்டு வேறு ஒருபெண்ணை மணப்பது சிறந்ததா? அல்லது மலடி இருக்க மற்றொருத்தி யையும் கைப்பிடிப்பது சிறந்ததா? ஏகதாரச் சட்டப்படி மலடியை விவாகரத்துச் சொல்லி, அவளைப் பராமரிக்கத் தக்க பெற்றோரோ, சகோதர, சகோதரிகளோ இல்லாமல் இருந்தால் அவளுடைய எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால், ஏகதார மணச் சட்டம் மனித வர்க்கத்திற்கு இன்னல் விளைவிக்கும் சட்டமாகும் என்பது புலனாகாமல் போகாது.

மனைவி வயது முதிர்ந்துவிட்டால், அல்லது பிரசவ வயதைக் கடந்துவிட்டாள் என்று வைத்துக்கொள்வோம். கணவனுக்கு மக்கள் வேண்டுமென்ற விருப்பமிருக்கிறது. இந்நிலையில் அவன் வேறு மணம் செய்யாமல் இருக்க முடியுமா?

ஒரு பெண் வசீகரமாக இருக்கிறாள் என்றும், அவளிடத்தில் ஒருவன் மனதைப் பறிகொடுத்து விட்டான் என்றும், அந்தப் பெண்ணும் அவனை விரும்புகிறாள் என்றும் வைத்துக்கொள்வோம். இந்நிலையில் மனைவியை நிராகரிக்காமல் கள்ளக் காதல் செய்வதா? அல்லது அவ்வழகியையும் சட்டப்படி திருமணம் செய்து எல்லோரும் இன்பமாக வாழ்வதா? இவற்றில் எது ஏற்றம் என்பதை எண்ணிப்பாருங்கள்.

இவற்றைத் தவிர பெண் கற்பமுற்று விட்டாலும் பிரசவமானாலும் பால்குடிக் குழந்தையை வைத் திருந்தாலும் ஆண், பெண் புருஷ சங்கமம்





பொருளடக்கம்

தடைபடும். ஆதலின், இவ்வாறான சந்தர்ப் பங்களில் உணர்ச்சியை அடக்கிக் கொள்ள இயலாத ஆடவன், கூடா நட்பில் ஈடுபடுவதா? அல்லது இரண்டாவது மணம் செய்து இருவருடனும் வாழ்வதா? என்பன போன்றவற்றை எல்லாம் ஏகதாரக் கொள்கைக்காரர்கள் நினைத்திருக்க மாட்டார்கள்.

ஏகதார மணச் சட்டம் செயல்படுத்தப்படுகிற நாட்டில் விபச்சாரம் அதிகமாக இருக்கிறதா? இந்தச் சட்டம் செயல்படாத நாடுகளில் அதிகமிருக்கிறதா? என்பதும் சிந்திக்க வேண்டிய மற்றொரு அம்சமாகும்.

# இஸ்லாமில் பெண்களின் நிலை

இஸ்லாமிற்கு முன்னர் உலகில் பெண்கள் இன்பம் தரும் கருவிகளாகவே மதிக்கப்பட்டனர். அவர்களுக்கு வாரிசு பாத்தியம் அளிக்கப் படாமலிருந்தது. மணம் புரியும் விஷயத்தில் அவர்களின் சம்மதம் கோரப்படவில்லை. மனித வர்க்கத்தில் அவர்கள் சரிபாதிப்பேர். இவ்வுலகில் வாழ அவர்களுக்கும் உரிமையுண்டு என்ற எண்ணம் அக்காலத்தில் இருந்ததில்லை. ஆடவர்க ளுக்கு உழைக்கவே அவர்கள் பிறந்தார்கள் என பல வர்க்கங்கள் கருதி அவர்களை நடத்திக் கொண்டிருந் தனர்.

இந்நிலையில் தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபித்துவத்தை





பொருளடக்கம்

அடைந்து இஸ்லாத்தைப் போதித்தார்கள்.

நேர்மையான முறையில் பெண்களுடன் வாழ வேண்டும். ஆடவர்களுக்கு பெண்கள் பணிய வேண்டும். பெண்களை அன்பாகவும், கண்ணியமாகவும் நடத்த வேண்டும். திருமணத்தின் போது பெண்ணின் சம்மதத்தைப் பெற வேண்டும். பலவந்தமாக திருமணம் செய்யக்கூடாது. பெண்களுக்கு வாரிசு பாத்தியமுண்டு. பெண் மக்களை உயிருடன் புதைக்கலாகாது; குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும் மனைவியாகக் கொள்ளும் நிபந்தனையுடன் திருமணம் செய்யலாகாது. விபச்சாரம் செய்யலாகாது. நீதியாக நடத்த இயலாது என்ற அச்சமுள்ளவர்கள் பலதார மணம் செய்யலாகாது. தங்களின் மனைவியரிடம் நீதியாக, சமமாக நடந்து கொள்ளவேண்டும். மனைவியை கணவன் விவாகரத்துச் செய்யலாம். கணவனை மனைவி விவாகரத்துச் செய்யலாம் என்றெல்லாம் விதிகளை ஏற்படுத்தி பெண்களின் அந்தஸ்தை இஸ்லாம் உயர்த்திற்று.

பலதாரமணத்திற்கு இஸ்லாம் கட்டுப்பாடு விதித்திருக்கிறது. அரபு நாட்டில் பலதாரமணம் எங்கும் வியாபித்திருந்தது. இத்தனை பெண்களைத் தான் மணக்கலாம் என்ற வரையறை இருக்கவில்லை. இந்நிலையில் தான் அரபியர் இஸ்லாத்தைத் தழுவினர். அவர்களில் சிலர் பத்துப் பேர்களுக்குக் கணவராக இருந்தனர். இஸ்லாத்தைத் தழுவிய பின்னர், அவர்களில் நான்கு பேர்களை மட்டும் வைத்துக் கொண்டு மற்றவர்களை விலக்கி விடுமாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிட்டார்கள்.





பொருளடக்கம்

பலதாரமணம் செய்வது அக்காலத்தில் அரபு நாடு உள்பட உலகெங்கும் வியாபித்துள்ள ஒரு செயலாக இருந்தது. இதனை ஏனைய மதங்கள் கண்டிக்கவோ கட்டுப்படுத்தவோ இல்லை. இதில் கட்டுப்பாட்டையும் சீர்திருத்தத்தையும் செய்த மார்க்கம் இஸ்லாம் தான். பெண்களுக்கும் உயிர் இருக்கிறது, உணர்ச்சி இருக்கிறது. அவர்களும் வாழப்பிறந்தவர்கள் தான். அவர்களின் ஒத்துழைப் பினால் தான் ஆடவர்களின் வாழ்வு விழுப்பமுறும் என்ற உண்மையை இஸ்லாம் உணர்த்தி, அதனை செயலிலும் செய்து காட்டிற்று.

## அடிமைப் பெண்கள்

மனிதனை மனிதர் அடிமைகளாக்கி அடக்கி ஆளும் வழக்கம் இவ்வுலகில் தொன்றுதொட்டு இருந்து வருகிறது. வலுவிழந்தவனை வலியவன் வாட்டுவது வன்செயலென இக்காலத்தவர் கூறியபோதிலும், இக்கொடுமை முற்காலத்தி லிருந்தே இருந்து வருகிறது. மனிதன் ஒரே தாய் தந்தைக்கு பிறந்திருந்த போதினும், பொறாமையும், புழுக்கமும் காரணமாக போரிட்டு வலிமை உள்ளவன் வலுவிழந்தவனை வாட்டி வதக்கி, அடக்கி, ஒடுக்கி அடிமையாக்கினான். இது எவ்விதக் கட்டுப்பாடுமின்றிப் பெருகி அடிமைகள், சுதந்திரர் என்ற இனத்தை ஏற்படுத்திவிட்டது. போரில் வென்றவர் நாட்டையும் பொருளையும் அபகரித்துக் கொள்வதுடன் அதில் வாழ்ந்த சாமான்யரையும் கூட அடிமைகளாக்கி மிருகங்களுக்கு ஒப்பாகவே நடத்தினர்.

இந்நிலையை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சீர்திருத்தினார்கள். சுதந்திர





பொருளடக்கம்

னாகப் பிறந்தவனை அடிமையாக்கக் கூடாது. போரில் கைதிகளாகப் பிடிக்கப்பட்டவர்களை அரசாங்கம் தான் அடிமைகளெனப் பிரகடனம் செய்ய வேண்டும். தனிநபர் எவருக்கும் அவ்வுரிமை இல்லை.

அடிமைகளாக்கப்பட்டவர்களை தன் மக்களைப் போல் நடத்த வேண்டும். அவர்களுக்குக் கல்வியையும், ஒழுக்கத்தையும் போதிக்க வேண்டும். அவர்களுடைய சக்திக்கு அதிகமாக அவர்களிடம் வேலை வாங்கக் கூடாது. அடிமைப் பெண்களிடம் எஜமானர்கள் உடலுறவு கொள்ளலாம். ஆனால், அவர்கள் கற்பமுற்று குழந்தை பெற்றால் குழந்தையின் தாய் என்ற அந்தஸ்திற்கு உயர்ந்து விடுவாள். பின்னர் அவளை வேறு யாருக்கும் விற்பனை செய்யவோ, திருமணம் செய்து கொடுக்கவோ எஜமானனுக்கு உரிமையில்லை. அவள் வயிற்றில் எஜமானனுக்குப் பிறக்கும் குழந்தைகள் அனைவரும் சட்டப்படி எஜமானனின் குழந்தைகளே. எஜமானனின் சொத்துக்களுக்கு அவர்கள் உரிய வாரிசுகளாவார்கள். சமூகத்தில் அவர்களின் அந்தஸ்து யாவருக்கும் சமமாகவே இருக்கும். மனைவி வயிற்றில் பிறக்கும் குழந்தைக்கும் அடிமைப் பெண் வயிற்றில் பிறக்கும் குழந்தைக்கும் எவ்வித வித்தியாசமோ உயர்வு தாழ்வோ இல்லை. எஜமானனின் மரணத்திற்குப் பின் ''குழந்தையின் தாய்'' (உம்முவலத்) என்ற அந்தஸ்துக்கு உயர்ந்து, தானாக விடுதலை பெற்றுவிடுவாள் என்பன போன்ற சட்டங்களை இஸ்லாம் இயற்றி அடிமைகளின் அந்தஸ்தை உயர்த்திற்று.

இத்திருத்தங்களுக்குப் பின்னர் அடிமைகள் தங்கள் எஜமானர்களின் குடும்பத்தில் சம அந்தஸ்துள்ள அங்கத்தினர்களாகவே மதிக்கப் பட்டனர். முஸ்லிம் அல்லாதாரிடம் சுதந்திரனாக வாழ்வதைப் பார்க்கினும் முஸ்லிம்களிடம் அடிமைகளாக வாழ்வது தங்களுக்கு கௌரவம் என்று அவர்கள் கருதினர்.

இதுமட்டுமல்ல, அடிமைகளை விடுதலை செய்வது நன்மையான காரியம் என்றும் இஸ்லாம் கூறியது. சத்தியம் செய்து அதனை முறித்து விட்டால், பர்லான நோன்பை நோற்று அதனை முறித்து விட்டால் அக்குற்றங்களுக்குப் பரிகாரமாக அடிமைகளை விடுதலை செய்யலாம். இவ்வாறு விரிவான சட்டங்களை இயற்றி அவர்கள் விடுதலையடைவதற்கு வழிவகை செய்தது இஸ்லாம்.

இச்சட்டத்தை இயற்றியதுடன் நில்லாமல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் அடிமைகளுக்கு விடுதலை அளித்து வழிகாட்டினார்கள். அவர்களிடம் விடுதலை பெற்ற முன்னாள் அடிமைகள் யார் என்ற விவரம் மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் மூன்றாம் பாகத்தில் பணியாளர்கள் பற்றிய விபரத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

அடிமைகளில் திறமை வாய்ந்தவர்களுக்கு இஸ்லாமிய அரசாங்கத்திலும் ராணுவத்திலும் உயர்ந்த பதவிகளை அளித்தார்கள். அவர்களின் தலைமையின் கீழ் பெரிய பெரிய ஸஹாபிகளும் கூட சாதாரண வீரர்களாகப் பணியாற்றினார்கள்.





பொருளடக்கம்

ஸஹாபிகள் காலத்திற்குப் பிறகு தோன்றிய அடிமை வம்சத்தினர் அரசோச்சினர். உலகமெங்கும் புகழ்பெற்று விளங்குகிற எகிப்து ஜாமிஉல் அஜ்ஹர் பல்கலைக் கழகத்தை ஸ்தாபித்தவர் சிசிலி நாட்டு அடிமையான அஜ்ஹர் என்பவர் தான். அவருடைய தலைமையின் கீழ் வந்த முஸ்லிம் படைதான் முஸ்லிம் அல்லாதாரின் கரத்தில் சிக்கிய எகிப்து நாட்டை மீண்டும் கைப்பற்றி அங்கு மீண்டும் இஸ்லாமிய ஆதிக்கத்தை ஏற்படுத்திற்று.*

அடிமைகளுக்கு இஸ்லாம் வழங்கிய இந்த உயர்வுகளையும், அடிமை வழக்கம் தானாக ஒழிவதற்கு இஸ்லாம் செய்த ஏற்பாடுகளையும் இஸ்லாமிய விரோதிகள் மறைத்துவிட்டு, அடிமை வழக்கத்தை இஸ்லாம் ஆதரிக்கிறது. அடிமைப் பெண்களை வைப்பாட்டியாக வைத்துக்கொள்ள இஸ்லாம் அனுமதிக்கிறது என்றெல்லாம் பிரச்சாரம் செய்து கொண்டிருக்கின்றனர்.

அடிமைப் பெண்களுடன் உடலுறவு கொண்டு அவர்களை மனைவியராக்கிக் கொள்வதும், சட்டவிரோதமாக வைப்பாட்டிகளை வைப்பதும் ஒன்று என்று உணரும்படி செய்ய அவர்கள் முயல்கின்றனர். வைப்பாட்டி மக்களுக்கு எந்தச் சமூகத்திலாவது சம அந்தஸ்து கொடுக்கப்பட்டிருக் கிறதா என்பதை அவர்கள் சிந்திக்க வேண்டும்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

---

* இச்சம்பவம் பற்றி இறவா வரம்பெற்றோர் எனும் தலைப்பின் கீழ் மௌலானா அவர்களால் எழுதப்பட்ட கட்டுரை அல்பாக்கியாத்துஸ் ஸாலிஹாத், வேலூர் நூற்றாண்டு விழா மலரில் இடம் பெற்றுள்ளது.





பொருளடக்கம்

அவர்களுக்கு நான்கு அடிமைப் பெண்கள் இருந்த விபரம் மேலே கூறப்பட்டு உள்ளது. ஒழுக்கம் இன்னதென்பதை உலகுக்கு அறிவித்த உத்தம நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களா வைப்பாட்டி வைத்தார்கள்? நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புதல்வரான ஸெய்யிதுனா இப்ராஹீம் (ரலி) அவர்களின் அன்னையான மாரியத்துல் கிப்தியா (ரலி) அவர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வைப்பாட்டி என்று "ஸீரத்து இப்னு ஹிஷாமை" ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த வர் எழுதி வைத்திருக்கிறார்.

ஸெய்யிதுனா அலீ (ரலி) அவர்களின் மக்களில் பன்னிருவர் அடிமைப் பெண்களின் வயிற்றில் பிறந்தவர்கள். இவர்களை பன்னிரண்டு இமாம்கள் என்று ஷியாக்கள் கொண்டாடுகின்றனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பெருமைக்குரிய சந்ததியினர் என்று முஸ்லிம் உலகம் முழுவதும் கௌரவிக்கிற ஸெய்யிதுனா அல் இமாம் அலிய்யுன்னக்கி (ரஹ்) அவர்களின் புதல்வர் ஸெய்யிதுனா அல் இமாம் ஹஸன் அஸ்கரீ(ரஹ்), ஸெய்யிதுனா அல்இமாம் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் புதல்வர்களான ஸெய்யிதுனா அல் இமாம் மூஸாகாஜிம் (ரஹ்) ஸெய்யிதுனா அலிய்யுனில் உறைளி (ரஹ்), ஸெய்யிதுனா இஸ்ஹாக்குப்னு ஜஃபர் ஸாதிக்(ரஹ்), ஸெய்யிதுனா அல் இமாம் ஜைனுல் ஆபிதினிப்னு ஸெய்யிதுனா அல்இமாம் ஹுஸைன் (ரஹ்) அவர்களின் புதல்வர்கள் ஸெய்யிதுனா ஜைதுஷ் ஷஹீத் (ரஹ்),

ஸெய்யிதுனா உமருல் அஷ்ரப் (ரஹ்) ஸெய்யிதுனா ஹுஸைனுல் அஸ்ஹர் (ரஹ்) ஆகியவர்களின் தாய்மார்கள் யாவரும் அடிமைப் பெண்கள். இப்பெரியார்களைப் பெற்றெடுத்ததன் காரணமாக உம்முவலத் என்ற அந்தஸ்திற்கு அவர்கள் உயர்ந்து, அவர்களின் எஜமானர்களான ஸெய்யிதுனா அல்இமாமுல் அலிய்யுன்னக்கீ (ரஹ்) ஸெய்யிதுனா அல் இமாம் ஜாபர் ஸாதிக் (ரஹ்), ஸெய்யிதுனா அல்இமாம் ஜைனுல் ஆபிதீன் (ரஹ்) ஆகியவர் களின் மறைவிற்குப் பின்னர் விடுதலை பெற்றவர்கள். இவர்கள் யாவரும் ஸெய்யிதுனா ஹுஸைன் (ரலி) அவர்களின் சந்ததியினர்.

இஸ்லாமிய விரோதிகளின் இத்தீய பிரச்சாரத்திற்குப் பயந்து, காதியானிகள் போன்ற கூட்டத்தார் திருக்குர்ஆனையே திரித்துக் கூறும் பணியில் இறங்கிவிட்டனர். அவர்கள் பால் அபிமானம் கொண்ட சிலர், அவர்களைப் பின்பற்றி திருக்குர்ஆனுக்கு திருந்திய விளக்கம் என்ற பெயரால் எதையெல்லாமோ எழுதுகின்றனர். சரித்திரப்பூர்வமான மேற்கண்ட உண்மைகளை அவர்கள் சிந்திப்பார்களாக.

முஸ்லிம் பெரியார்களைப் பற்றியும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றியும் தப்பெண்ணம் ஏற்படுத்துவதற்காகவே அடிமை வழக்கத்தை இஸ்லாம் அனுமதிக்கிறது என்று இஸ்லாமிய விரோதிகள் கூறி, அதனைப் பிரச்சாரம் செய்கின்றனர்.

அடிமை வழக்கத்தை முற்கால வேதங்கள் அனுமதிக்கின்றன. கடந்த நூற்றாண்டில் தான் ஐரோப்பியரின் பாராளுமன்றங்களில் அடிமை





பொருளடக்கம்

ஒழிப்புச் சட்டங்களை இயற்றி, தங்கள் அதிகாரத்திற்குட்பட்ட நாடுகளில் அடிமைகளை ஒழித்தன. இந்திய, பாகிஸ்தான், பர்மா, இலங்கை, மலேசியா போன்ற நாடுகளிலும் ஆப்பிரிக்காவி லுள்ள நாடுகளிலும் அடிமைகள் ஒழிக்கப்பட்டனர். நாடு பிடிக்கும் வல்லரசுகள் அடிமை ஒழிப்புச் சட்டத்தை இயற்றி மனித வர்க்கத்திற்கு நன்மை செய்வதாக விளம்பரம் செய்து வேறு வகையில் மனித சுதந்திரத்தைப் பறிக்கின்றன. எனவே, அடிமை வழக்கம் கூடாது என்பதெல்லாம் அரசியல் பிரச்சாரமேயல்லாது மதப் பிரச்சாரமல்ல. அடிமை களை ஒழித்து, மனித சுதந்திரத்தைப் பறித்து, அரசியல் அடிமைகளாக்கப்பட்ட சுதந்திர நாடுகளில் வாழும் சுதேசிகளைப் பார்க்கினும் இஸ்லாமிய நாடுகளில் வாழ்கிற அடிமைகள் சுதந்திரமாகவும் கௌரவமாகவும் வாழ்ந்தனர். இப்பொழுதும் வாழ்கின்றனர்.





பொருளடக்கம்

# நபி (ஸல்) அவர்களுக்குப் பெண்ணாசை இருந்ததா?

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒன்றுக்கும் மேற்பட்ட மனைவியருடன் வாழ்ந்ததைக் குறித்து சன்மார்க்க விரோதிகள் தங்கள் மனம்போல் எழுதி வருகின்றனர். இருபத்தைந்து வயதில் முதல் திருமணம் செய்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதற்கு முன்னர் பெண்களை தவறான எண்ணத்துடன் ஒருமுறையாவது பார்த்தார்கள் என்று அக்காலம் முதல் இக்காலம் வரையில் சன்மார்க்க விரோதிகளில் எவரும் சொல்ல வில்லை. வாளேந்திப்போர் செய்த அரபு நாட்டு எதிரிகள் கூட இயம்பவில்லை.

இருபத்தைந்தாம் வயதில் முதன் முதலாக திருமணம் செய்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தங்களிலும் பதினைந்து வயதிற்கு மூத்தவரும், ஒருவர் பின் ஒருவராக இருவருக்கு மனைவியாக இருந்தவரும், குழந்தை களைப் பெற்றெடுத்து தாயாக இருந்தவருமான அன்னை கதீஜா (ரலி) அவர்களைத்தான் மணந்தார் கள். அதுவும் கூட அன்னை (ரலி) அவர்கள் தூது அனுப்பிக் கேட்டுக் கொண்டதால் தான். தாங்களாகவே விரும்பிப் பெண்பேசி திருமணம் செய்யவில்லை.

இவரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மணந்து 25 வருடகாலம் இன்பமாக வாழ்ந்தார்கள். பணத்திற்காக இத்திரு





பொருளடக்கம்

மணத்தைச் செய்திருந்தால், வேறு கன்னிப் பெண்களையும் பின்னர் திருமணம் செய்திருக்க முடியும். மக்கமாநகரிலுள்ள அழகிகளில் யாரை விரும்பினாலும் திருமணம் செய்து வைப்பதாக குறைஷித் தலைவர்களின் தூதுவர்கள் கேட்டுக் கொண்டபோதும் கூட அவ்வேண்டுகோளை நிராகரித்துவிட்டு அவர் ஒருவருடன் மட்டுமே வாழ்ந்தார்கள்.

இருபத்தைந்து வருடங்களுக்குப் பின்னர் அன்னை (ரலி) அவர்கள் மறைந்தார்கள். ஆயினும், அவர்கள் பாலுள்ள அபிமானம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பின்னர் குறையவே இல்லை. மேலும், அன்னை (ரலி) அவர்களின் தோழிகள், சகோதரிகள் முதலியவர் களிடம் கூட அந்தப் பழைய வாஞ்சையை மறக்கவில்லை.

அன்னை (ரலி) அவர்களுக்குப் பின்னர், பிரம்மச்சாரியாக இருக்கவில்லை. வயதுக்கு வராத பெண் மக்கள் இருந்தனர். அவர்களைக் கவனித்துக் கொள்ள பெண் தேவையாக இருந்தது. எனவே, அவர்கள் திருமணம் செய்தார்கள். ஆனால், கன்னியை அல்ல. வயது முதிர்ந்த ஒரு விதவை யைத்தான். அப்பொழுது அவ்விதவைக்கு வயது ஐம்பது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அதே வயதினராகத் தானிருந்தார்கள்.

பின்னர் இறைவனின் கட்டளைப்படி ஆறு வயதுக் குழந்தையை மணந்தார்கள். ஆயினும், மூன்று வருடங்களுக்குப் பின்னர் தான் கணவன் மனைவி என்ற சம்பந்தம் அவர்களுக்கிடையில் ஏற்பட்டது. பின்னர் 55 வயதிலிருந்து 59 வயதிற்குள்

ஏனைய திருமணங்களைச் செய்தார்கள். அவர்கள் யாவரும் கன்னிப் பெண்களல்லர். நல்ல வாலிபப்பருவத்தில் ஒரே மனைவியுடன் வாழ்ந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சாதாரணமாக ஆடவர்கள் வயோதிகத்தை அடைந்து பெண் விருப்பத்தை இழக்கும் பருவத்தை அடைந்த பின்னர் பலரை மணப்ப தென்பது பெண்ணாசையால் உந்தப்பட்டா? அல்லது வேறு காரணத்தாலா? என்பது சிந்திக் கத்தக்க விஷயம். பெண்ணாசையால் அல்ல என்பதை எவரும் உணர்ந்து கொள்ள முடியும். இதனைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "**எனக்கு பெண்களில் எந்தத் தேவையுமில்லை**" என்று கூறியிருப்பதாக ஸஹ்லுப்னு ஸஃத (ரலி) அறிவித்த ஹதீஸ் 'தாரமீ' என்ற நூலில் எழுதப்பட்டிருக்கிறது.

அரபு நாட்டில் திருமணம் செய்வது கோத்திரங் களுக்குள் உறவையும், சமாதானத்தையும் வளர்ப்பதற்கு பெரும் காரணமாக கருதப்பட்டு வந்தது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முதல் எதிரிகள் மக்கத்து குறைஷியர் தாம். அவர்களுக்கு தலைமை வகித்த பிரதம தலைவர் அபூசுப்யான் ஆவார். குறைஷிப் படைக்குத் தலைமை வகித்துப் போரிடல், படை திரட்டல் முதலிய அதிகாரங்கள் இவரிடம் தான் ஒப்படைக்கப்பட்டிருந்தன. இதற்காக இவரிடம் ஒரு கொடியும் இருந்தது. அக்கொடியை உயர்த்தினால் குறைஷியர் யாவரும் வந்து ஒன்று கூடிவிடுவர்.

பத்ருப் போருக்குப் பின்னர் இப்பதவி அவருக்குக் கிடைத்தது. உஹுது, ஹம்ரஉல் அஸ்வத், பத்ருல் உத்ரா, அகழி முதலிய போர்களில் அவருடைய கொடிதான் பகைவர்களின் கூட்டத்தில் பறந்து கொண்டிருந்தது. அவருடைய புதல்வி அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்களை திருமணம் செய்த பின்னர், அக்கொடி பகைவர்களின் அணியில் பறக்கவில்லை. பின்னர் நடைபெற்ற எந்தப் போருக்கும் அவர் தலைமை தாங்கவில்லை. ஹுதைபிய்யா உடன்படிக் கையைப் புதுப்பிக்க சமாதானத் தூதுவர் என்ற முறையிலேயே அவர் திருமதீனாவிற்கு வந்தார். சில நாட்களுக்குப் பின்னர் அவரும், அவருடைய புதல்வர்களும் முஸ்லிம்களாயினர்.

அன்னை ஜுவைரிய்யா பின்துல் ஹாரித் (ரலி) அவர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்ததிலிருந்து பனூ முஸ்தலக் கோத்திரத்தார் இஸ்லாத்திற் கெதிரான கோத்திரங்களுடன் சேரவில்லை. வழிப் பறி செய்வதும், திருடுவதும் தான் இக்கோத் திரத்தின் தொழில்கள். இவற்றையும் கூட அவர்கள் நிறுத்தி விட்டனர்.

இக்கோத்திரத்திற்கு பல கிளைகளிலிருந்தன. அவையாவும் போர் வெறி கொண்டவை. இத்திருமணத்திற்குப் பின்னர் அக்கிளைக் கோத்திரங்கள் எதிர்ப்பைக் கைவிட்டன. இதற்கு முன்னர் நிகழ்ந்த ஒவ்வொரு போரிலும் இக்கோத் திரத்தின் கிளைகளில் ஏதாவது சம்பந்தப்படாமல் இருந்ததில்லை.

அன்னை ஸபிய்யா (ரலி) அவர்கள் யூதத் தலைவரின் புதல்வி. அவரை திருமணம் செய்வதற்கு முன்னர் இஸ்லாத்தை எதிர்க்கும் கோத்திரங்களுக்கு பணம், ஆயுதம் முதலியவற்றை அவர்கள் கொடுத்து, எல்லாக் கோத்திரங்களையும் போருக்குத் தூண்டி விட்டனர். அத்துடன் அவர்கள் தனித்தும், பிறருடன் சேர்ந்தும் போரிட்டனர். இத்திருமணத்திற்குப் பின்னர் அவர்கள் எந்தப் போரிலும் கலந்து கொள்ளாமல் ஒதுங்கியே இருந்தனர்.

அன்னை மைமூனா (ரலி) அவர்களுடைய ஒரு சகோதரி நஜ்த் நாட்டுத் தலைவரை மணந்திருந்தார். இவர்கள் தான் தங்களுக்கு மத உபதேசிகளை அனுப்ப வேண்டுமென்று கூறி எழுபது ஸஹாபாக்களை அழைத்துச் சென்று கொலை செய்தவர்கள். இவர்களால் பல முறை அமைதிக்குப் பங்கமும், குழப்பங்களும் உண்டாயின. இவர்கள் இஸ்லாத்தை எதிர்ப்பவர்களாகத் திகழ்ந்தார்கள். இவ்வன்னையை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்த பின்னர் இவர்களால் குழப்பமோ கலகமோ ஏற்படவில்லை.

இந்நால்வரின் திருமணம் நாட்டில் அமைதியையும் சமாதானத்தையும் ஏற்படுத்துவதற்கும் இஸ்லாத்தின் மீது வரும் எதிர்ப்பை குறைப்பதற்கும் பெரிதும் காரணமாக இருந்தது.*

---

* ஏடன் ஆதிவாசி இனத்தவருக்கு எப்போதுமே ஒரு வழக்கம் உண்டு. திருமண உறவு ஒன்றின் மூலம்தான் அவர்கள் யாராயிருந்தாலும் உதவ முன்வருவார்கள்.

*டாலர் தேசம், பக்கம் 729*





பொருளடக்கம்

அன்னை ஜைனபு (ரலி) அவர்களை திருமணம் செய்தது, வளர்ப்பு மகன் மனைவியை திருமணம் செய்வது கூடாது என்ற மூட நம்பிக்கையையும், பிறரின் பிள்ளையைத் தன் பிள்ளையாகக் கொள்ளும் தவறான பழக்கத்தையும் ஒழித்தது. இத்திருமணத்தால், இஸ்லாத்தின் கொள்கை ஊர்ஜிதமாயிற்று.

அன்னையர்களான ஆயிஷா ஸித்தீக்கா (ரலி), ஹப்ஸா (ரலி) ஆகியவர்களின் திருமணம் எவ்வளவு பயனுள்ளது என்பது சரித்திரப் பிரசித்தமானது. அன்னை (ரலி) அவர்கள் மட்டும் இரண்டாயிரத்திற்கும் அதிகமான ஹதீஸ்களை அறிவித்து, இஸ்லாமிய உலகில் சன்மார்க்க அறிவைப் பெருக்கினார்கள். திருக்குர்ஆனின் விளக்கங்களை உலகோருக்கு உணர்த்தினார்கள். அன்னை ஹப்ஸா (ரலி) அவர்கள் திருக்குர்ஆன் பிரதியைப் பாதுகாத்து வைத்திருந்து, ஹளரத் உதுமான் (ரலி) அவர்கள் காலத்தில் பலபிரதிகளாக்க உதவினார்கள். இன்றைய உலகில் இருந்துவருகிற திருமறை அக்காலத்திலிருந்து இன்று வரை மாறாமலிப்பதற்கு அன்னை ஹப்ஸா (ரலி) அவர்களின் பாதுகாப்புப் பணியும் சேவையும் பெரிதும் காரணமாகும்.

இவ்விருவரின் தந்தையர்கள் இஸ்லாத்திற்குச் செய்த சேவைகளும் இஸ்லாத்தை நிலைநிறுத்த அவர்கள் கிலாபத் பதவியை ஏற்றுச் செய்த தொண்டுகளும் உலகம் முடியும் வரையில் முஸ்லிம்களுக்குச் செய்த பேருதவியாக விளங்குகின்றன.

அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்கள்





பொருளடக்கம்

இஸ்லாமியக் கல்விக்கு பெருந்தொண்டாற்றியவர்கள். அவர்களின் ஆலோசனைகளும், சட்ட நுணுக்கப் பேச்சுக்களும், ஹதீஸ் அறிவிப்புகளும் உலகப் பிரசித்தி பெற்றவை. இவற்றை எல்லாம் கவனிக்கும் போது இஸ்லாத்தின் பாதுகாப்பு, ஸ்திரப்பாடு, பிரச்சாரம் என்ற இஸ்லாமிய நோக்கத்திற்காகவே இத்திருமணங்கள் நடைபெற்றன. சரீர இச்சையை நிறைவேற்றிக் கொள்வதற்காகச் செய்யப்பட்டனவல்ல. இது நியாயபுத்தி படைத்த எவருக்கும் விளங்கும். சுருங்கக் கூறுமிடத்து இவர்கள் யாவரும் இஸ்லாமியச் சேவைக்கென்று பொறுக்கி எடுக்கப்பட்ட சேவகிகளேயன்றி இன்பம் அளிக்க தோன்றியவர்களல்லர். இவர்களின் திருமணங்களைப் பற்றி இஸ்லாமிய விரோதிகளும் முக்கியமாக மேற்கத்தியர்களும் செய்யும் தவறான பிரச்சாரத்திற்கு அந்நாட்டிலேயே அவர்களின் மத்தியிலேயே பலரை அல்லாஹு தஆலா தோற்றுவித்து அவர்களின் பிரச்சாரப் பாணியிலேயே பதிலளிக்கச் செய்துள்ளான்.

# அன்னையர்களின் குறிப்புகள்

1. **அன்னை கதீஜத்துல் குப்ரா** (ரலி): திருமணத்தின் போது வயது 40. மரணத்தின் போது 65. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நபித்துவம் வருவதற்கு முன்னர் 15 வருடகாலமும், நபித்துவம் வந்த பின்னர் பத்து வருடகாலமும் ஆக இருபத்தைந்து வருட காலம் சேர்ந்து வாழ்ந்தார்கள். திருமக்காவில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

2. **அன்னை ஸௌதா** (ரலி): நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் 50வது வயதில் நபித்துவம் கிடைத்த பத்தாம் ஆண்டில் திருமணம் செய்து, பதினான்கு வருடகாலம் கூடி வாழ்ந்தார்கள். ஹிஜ்ரீ 54ம் வருடத்தில் ஹளரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப் பட்டார்கள்.

3. **அன்னை ஆயிஷா ஸித்தீக்கா** (ரலி): நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நபித்துவம் கிடைத்த பத்தாம் வருடத்தில் 6வது வயதில் திருமணம் செய்து, 9வது வயதில் வாழ்வைத் தொடங்கி, ஒன்பது வருடகாலம் கூடிவாழ்ந்து, ஹிஜ்ரீ 57ம் வருடத்தில் 63வது வயதில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

4. **அன்னை ஹப்ஸா** (ரலி): ஹிஜ்ரீ 3ம் வருடத்தில் 22ம் வயதில் திருமணம் செய்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன்





பொருளடக்கம்

8 வருடகாலம் கூடிவாழ்ந்து ஹிஜ்ரீ 41ம் ஆண்டில் 59வது வயதில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

5. **அன்னை ஜைனபு பின்து குஜைமா** (ரலி): ஹிஜ்ரீ 3ம் வருடத்தில் 30ம் வயதில் திருமணம் செய்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் மூன்று மாதகாலம் கூடிவாழ்ந்து ஹிஜ்ரீ 3ம் வருடத்தில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப் பட்டார்கள்.

6. **அன்னை உம்மு ஸலமா** (ரலி): ஹிஜ்ரீ 4ம் வருடத்தில் 24ம் வயதில் திருமணம் செய்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் 7 வருடகாலம் கூடிவாழ்ந்து ஹிஜ்ரீ 61ம் வருடத்தில் 84ம் வயதில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

7. **அன்னை ஜைனபு பின்து ஜஹ்ஷ்** (ரலி): ஹிஜ்ரீ 5ம் வருடத்தில் 36ம் வயதில் திருமணம் செய்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் 6 வருட காலம் கூடி வாழ்ந்து, ஹிஜ்ரீ இருபதாம் வருடத்தில் 51ம் வயதில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

8. **அன்னை ஜுவைரிய்யா பின்துல் ஹாரித்** (ரலி): ஹிஜ்ரீ 5ம் வருடத்தில் 20ம் வயதில் திருமணம் செய்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் 6 வருட காலம் வாழ்ந்து ஹிஜ்ரீ 56ம் வருடத்தில் எழுபத்தோராம் வயதில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.





பொருளடக்கம்

9. **அன்னை உம்மு ஹபீபா** (ரலி): ஹிஜ்ரீ 6ம் வருடத்தில் 36ம் வயதில் திருமணம் செய்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் 5 வருடகாலம் கூடி வாழ்ந்து, ஹிஜ்ரீ 44ம் வருடத்தில் 72ம் வயதில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப் பட்டார்கள்.

10. **அன்னை ஸபிய்யா** (ரலி(: ஹிஜ்ரீ 7ம் வருடத்தில் 17ம் வயதில் திருமணம் செய்து, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்க ளுடன் மூன்றே முக்கால் வருடகாலம் கூடி வாழ்ந்து, ஹிஜ்ரீ 50ம் வருடத்தில் அறுபதாம் வயதில் திருமதீனாவில் மறைந்து ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

11. **அன்னை மைமூனா** (ரலி): ஹிஜ்ரீ 7ம் வருடத்தில் 36ம் வயதில் திருமணம் செய்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் மூன்றேகால் வருடங்கள் கூடி வாழ்ந்து, ஹிஜ்ரீ 51ம் வருடத்தில் எண்பதாவது வயதில் திருமக்காவிற்குப் பக்கத்திலுள்ள வாதிபாத்திமாாவில் ஸரப் என்ற இடத்தில் மறைந்து அங்கேயே நல்லடக்கம் செய்யப் பட்டார்கள்.

நபி (ஸல்) அவர்களின் துணைவியர்கள் பதினோரு பேர்களில் திருமக்காவில் ஜன்னத்துல் முஅல்லாவில் ஒருவரும், ஸரபியில் ஒருவரும், திருமதீனாவில் ஜன்னத்துல் பக்கீயில் ஒன்பது பேர்களும் அடக்கம் செய்யப்பட்டிருக்கின்றனர்.

உம்மஹாத்துல் முஃமினீன்களில் வபாத்தானவர் முதலாமவர் அன்னை கதீஜா (ரலி). கடைசியானவர்





பொருளடக்கம்

அன்னை மைமூனா (ரலி). திருமதீனாவில் அடக்கம் செய்யப்பட்டவர்களில் முதலாமவர் அன்னை ஜைனப் பின்து குஜைமா (ரலி). கடைசியானவர் அன்னை உம்மு ஸலமா (ரலி). உம்மஹாத்துல் முஃமினீன்களில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்னிலையில் வபாத்தான வர்கள் மக்காவில் அன்னை கதீஜா (ரலி). மதீனாவில் அன்னை ஜைனப் பின்து குஜைமா (ரலி) ஆகிய இருவருமாவார். மற்றைய ஒன்பது பேர்களும் பின்னர் மறைந்தார்கள். இவர்களில் முதலாமவர் அன்னை ஜைனபு பின்து ஜஹ்ஷ் (ரலி). கடைசி யானவர் அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்களாவார்.

திருமதீனாவில் அன்னையர் ஒன்பது பேர்களும் ஜன்னத்துல் பக்கீயில் ஓரிடத்தில் வரிசையாக அடக்கம் செய்யப்பட்டு இருக்கிறார்கள்.)





பொருளடக்கம்

# உம்மஹாத்துல் முஃமினீன்களுடன் வாழ்தல்

தங்களுக்குரிய கணவனையும், மனைவியையும் தாங்களே நேரில் சந்தித்துத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையைக் கொடுத்ததாக பெருமை பேசிக் கொள்ளும் மேல் நாட்டில், கணவன் மனைவிக்கு மத்தியில் ஏற்படும் பிணக்குகளை விசாரித்துத் தீர்ப்புக் கூறுவதற்கும், வாழ்க்கைப் பணத்தை நிர்ணயிப்பதற்கும், திருமண விலக்கை பதிவு செய்வதற்கும், தனி நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டு இருக்கின்றன. அவற்றில் கொண்டு வரப்படும் வழக்குகள் விநோத மானவை. விசாரணை புரியும் நீதிபதிக்கு வாதி பிரதிவாதிகளின் வாக்குமூலங்கள் சில சமயங்களில் புரியாத புதிர்களாகத் தோன்றுகின்றன.

மனைவியரை எப்படி வைத்து வாழ வேண்டும்? கணவருடன் எப்படிக் கூடி வாழ வேண்டும்? தாம்பத்திய வாழ்வின் தர்மம் என்ன? என்பன போன்ற விஷயங்களை உணராமல் கண்டதும் காதல் என்று கையைப் பிடிக்கும் வர்க்கத்திலும் நாட்டிலும் புதுப்புதுப் பிரச்சினைகள் தோன்றுவது இயல்பு. எனவே, அங்கு வழக்குகளும் பிரச்சனைகளும் ஏற்படுவதில் வியப்பு எதுவும் இல்லை.

இஸ்லாம் மார்க்கம் இதற்கெல்லாம் சட்டங்களையும் ஒழுங்குகளையும் முறைகளையும் ஏற்படுத்தியிருக்கிறது. அவற்றை உணர்ந்து கடைப்பிடிக்கும் குடும்பங்களில் கணவன் மனைவி சண்டை உண்டாவதில்லை.

தவிர, பலதாரமணம் செய்வதை மேல் நாட்டினர் சட்டப்படி தடுத்தபோதிலும் அத்தகைய திருமணங்கள் உலகில் பல இடங்களில் அனுமதிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஆனால், பலதாரங்களை மணந்தவர்கள் நிம்மதியான வாழ்க்கையை நடத்துவது அபூர்வம். இதற்குக் காரணம் என்னவெனில் மனைவியருக்கிடையில் நீதியாக நடந்து கொள்ளாததும் அவர்களை நீதியாக நடத்தத் தெரிந்து கொள்ளாதததும் தான்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பலதாரங்களை மணந்தவர்கள் தான். அவர்களுக்கு வாய்த்த மனைவியர் நபிமார்களைப் போன்றவர்களல்லர். ஏனைய பெண்களுக்கிருக்கிற ஆசை, கர்வம், சக்களத்திப் போராட்டம், கட்சிப் பிரதிக்கட்சி ஆகிய யாவும் அவர்களிடமுமிருந்தன. அவர்களுடன் எவ்வாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வாழ்ந்தார்கள் என்பதைப் பற்றிய விபரம் மக்களுக்கு நல்ல முன் மாதிரியாகும்.

خَيْرُكُمْ خَيْرُكُمْ لِاَهْلِهِ وَاَنَا خَيْرُكُمْ لِاَهْلِي

"உங்களில் நல்லவர் தன் குடும்பத் தாரிடம் நல்லவராக இருப்பவர்தான். இன்னும் நான் என் குடும்பத்தார் விஷயத்தில் உங்களில் நல்லவன்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

குடும்பத்தார் விஷயத்தில் நல்லவிதமாக நடந்து கொள்ள வேண்டும் என்பதை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மேற்கண்ட





பொருளடக்கம்

ஹதீஸின் மூலம் உணர்த்தியது மட்டுமின்றி செயல்வடிவிலும் நடத்திக் காண்பித்தார்கள்.

அவர்கள் தங்களுடைய வீட்டிற்குச் செல்லும் போது அஸ்ஸலாமு அலைக்கும் (உங்களுக்கு ஈடேற்றம் உண்டாவதாக) என்று ஸலாம் சொல்வார்கள். இரவு நேரங்களில் வீட்டினுள் நுழைந்தால் மெதுவாக ஸலாம் சொல்வார்கள். வீட்டிலுள்ளோர் தூங்கிக் கொண்டிருந்தால், ஸலாம் சொல்லும் சப்தத்தைக் கேட்டு, அவர்கள் விழித்துக் கொள்ளக் கூடாது. அவர்களின் தூக்கத்திற்கு இடையூறு வரக்கூடாது. தூங்காமல் விழித்துக் கொண்டிருந்தால் ஸலாம் சொல்வதைக் கேட்டுக் கொள்ளட்டும் என்பது அவர்களின் நோக்கம்.

உண்ணல், பருகல், உடுத்தல், உரையாடல் முதலிய யாவற்றிலும் எல்லா மனைவியரிடத்திலும் சமமாக நடந்து கொண்டார்கள். உள்ளூரில் இருக்கையில் ஒவ்வொரு நாளிலும் அஸர்த் தொழுகைக்குப் பின்னர் மனைவியர் வசிக்கிற ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று, அவர்களுக்கு அவசியமானவற்றைக் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள். மஃக்ரிபுத் தொழுகைக்குப் பின்னர் யாவரையும் மொத்தமாகச் சந்திப்பார்கள். இரவில் முறை வைத்து ஒவ்வொரு மனைவியரின் வீட்டில் தங்குவார்கள்.

மனைவியரின் தோழிகளிடத்தில் மரியாதையாக நடந்து கொள்வார்கள். அவர்களுடைய உறவினர்களுக்கு உபகாரங்கள் உதவிகள் செய்து அவர்களிடம் சந்தோஷமாக இருந்து கொள்வார்கள். பிரயாணம் செய்தால் சீட்டுப் போட்டுப் பார்த்து





பொருளடக்கம்

எவர் பெயருக்கு சீட்டு விழுகிறதோ அவரைத் தங்களுடன் அழைத்துச் செல்வார்கள்.

ஒவ்வொரு மனைவிக்கும் தனித்தனி அறை கொடுக்கப்பட்டிருந்தது. இவைகள் ஒன்றோடொன்று சேர்ந்தே இருந்தன. இக்காலத்து மக்கள் வீடுகளில் பொருள்களையும் பாத்திரங்களையும் துணிமணிகளையும் குவித்திருப்பது போல அவர்களின் வீடுகளில் பொருட்கள் இல்லை.

அன்னை ஹப்ஸா (ரலி) அவர்கள் வீட்டில் படுக்கைக்காக ஒரு துண்டுதான் இருந்தது. அதனை துட்டிவிட்டுப் படுக்கைக்காக விரித்துக் கொள்வார்கள்.

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) அவர்கள் வீட்டில் படுக்கைக்காக ஒரு தோல் துண்டு தான் இருந்தது. அதனுள் பேரீத்த ஓலைகள் திணிக்கப் பட்டிருந்தன.

அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்கள் அன்னை உம்முல் மஸாக்கீன் ஜைனபு பின்து குஜைமா (ரலி) அவர்கள் வசித்த வீட்டில் வசித்தார்கள். அவ்வீட்டிற்கு அவர் முதன் முதலாகச் சென்றபோது அங்கு ஒரு திருகையையும், கொஞ்சம் கோதுமை யையும் தான் இருந்தது.

அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் வீட்டில் ஒரு நீர்த் துருத்தி இருந்ததாக அவருடைய சகோதரியின் புதல்வர் இப்னு அப்பாஸ் (ரலி) கூறியுள்ளார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் மரத்தால் செய்த ஒரு கட்டோரா (கோப்பை) இருந்ததாக அனஸ் (ரலி) கூறியுள்ளார்.





பொருளடக்கம்

கைபர் வெற்றி கொள்ளப்பட்ட பின்னர் தான் உம்மஹாத்துல் முஃமினீன்களின் உணவிற்கு பிரத்தியேக ஏற்பாடு செய்யப்பட்டது. ஒவ்வொரு மனைவிக்கும் எண்பது வஸக்கு பேரீத்தம் பழமும், நாற்பது வஸக்கு தொலிக் கோதுமையும் ஏற்பாடு செய்யப்பட்டது. பாலுக்காக ஒவ்வொருவருக்கும் ஒரு பால் ஒட்டகையும் கொடுக்கப்பட்டன.

*குறிப்பு: மௌலானா அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1280, 1521 காண்க.*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் துணைவியர்கள் இவற்றில் தங்களுக்குத் தேவையானதை வைத்துக் கொண்டு மீதியை விதவைகள், அநாதைகள் முதலியவர் களுக்கு பகிர்ந்தளித்துவிடுவார்கள்.

உம்மஹாத்துல் முஃமினீன்களில் எவரும் தம்முடைய சக்களத்திமார்களில் எவரையும் அவருடைய அந்தஸ்திற்குக் குறைவான வார்த்தை கூறுவதை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சகிக்கமாட்டார்கள். ஒரு முறை அன்னை ஜைனபு பின்து ஜஹ்ஷ் (ரலி) அவர்கள், அன்னை ஸபிய்யா (ரலி) அவர்களை யூதப் பெண் என்று கூறிவிட்டார். அவர் யூத வகுப்பில் பிறந்தவர் என்பதிலும், அவருடைய பெற்றோர்கள் இருவரும் யூதர்களாக இருந்தனர் என்பதிலும் சந்தேகமில்லை. அவர் கூறியது உண்மையே. ஆயினும், அவர் கூறிய பாணி, பேச்சின் போக்கு அவரை ஏளனமாகக் கூறுவது போல் இருந்தது. எனவே, அன்னை ஜைனபு (ரலி) அவர்கள் வீட்டிற்கு நபி





பொருளடக்கம்

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் செல்லவில்லை. இதனையறிந்த அன்னை ஜைனபு (ரலி) அவர்கள் தௌபாச் செய்தார்கள். தவறு மன்னிக்கப்பட்டது.

சக்களத்திகள் ஒருவருக்கொருவர் போட்டியாக இருப்பது சகஜம். ஆனால், வந்த போட்டியை முற்றவிடலாகாது. தகாத வார்த்தைகளைக் கூறினால் உடனுக்குடன் கண்டித்துவிட வேண்டும். இதில் அசட்டையாக இருப்பது விபரீத விளைவு களை உண்டாக்கும்.

وصلى الله على سيدنا محمد وعلى آله

وصحبه اجمعين والحمد لله رب العالمين





பொருளடக்கம்